

# ஸ்ரீவைஷ்ணவம்

## ஓர் எளிய அறிமுகம்

விண்ணகரம் வேங்கடாச்சாரி ஸ்வாமிகள்
சதாபிஷேக வைபவத்தன்று (28.01.2018)
வெளியிடப்பட்டது



ஸ்ரீமான் விண்ணகரம் வேங்கடாசாரி
ஸ்வாமிகள்
ஸ்ரீமதி ராஜலஷ்மி அம்மங்கார்



# ஸ்ரீவைஷ்ணவம்

## ஓர் எளிய அறிமுகம்




தொகுப்பு

**விண்ணகரம் வரதன்**

எம்.ஏ. (வைஷ்ணவம்)

எம்.ஏ. (திவ்யப்ப்ரபந்தம்)

# Saranagathy - the Tortoise way.

Long long ago, the tortoises' didn't have those hard and strong shells. They walk in Somali deserts unprotected and exposed from the raging sun. The vultures have always noticed these tortoises crawling slowly and planned to have a good meal of them. They met, connived and plotted against the tortoises, to eat them alive. The news got around about the plan; the tortoise had only one concern. "Was the God there in the meeting"? Of course, God is everywhere, said the informers. When the impending attack came, God prevented it by covering the tortoise with this strong and hard shell and the vultures never dared to attack the tortoises. **Who taught these tortoises, Saranagathy?**

Moral: ***Complete, Absolute and Total Surrender to God is the only Armour for us.***

# என்னுரை

விசிஷ்டாத்வைதம் அல்லது ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாயம் என்பது ஒரு மஹா சமுத்திரம். அதில் ஆழ்ந்து ஆழங்கால் பட்டவர்கள் ஆழ்வார்களும் ஆசார்யர்களும். அவர்கள் அருளிச்செய்து, பெரும்பாடு பட்டு வளர்த்த இந்த பொக்கிஷத்தை, முன்னோர் மொழிந்த முறை தப்பாமல், இளையோரும் கற்று அனுபவிக்க அடியேன் செய்யும் சிறிய முயற்சி தான் இந்த தொகுப்பு.

இந்த நூலில் சொல்லப்பட்டுள்ள கருத்துக்கள் எதுவும் அடியேனுடையதல்ல.
காலங்காலமாக வேதங்கள், இதிஹாச புராணங்கள், அருளிச்செயல்கள் எனப்படும் நாலாயிர திவ்யப்ரபந்தம், பூர்வாசார்யர்களின் வ்யாக்யானங்கள், மற்றும் பல க்ரந்தங்கள் மூலமாக எழுதப்பட்டும், காலக்ஷேபங்கள், உபன்யாசங்கள் மூலம் பலமுறை சொல்லப்பட்டும் உள்ள கருத்துக்களின் தொகுப்பே ஆகும்..

ஸ்ரீமத் ராமாயணமும், திருவாய்மொழியும் இருக்கும் வரை, ஸ்ரீ வைஷ்ணவம் ஓங்கி, மனித மேம்பாட்டுக்கு ஓர் தலைசிறந்த வழிகாட்டுதலாக இருக்கும் என்பதில் சிறிதளவும் ஐயமில்லை.

என்னையும் இப்புவியில் ஒரு பொருளாக்கி, முன்னைப் பழவினை வேரறுத்து, ஊழி முதல்வனையே பணியப் பணித்த ஸ்ரீ இராமானுஜர் திருவடிகளே தஞ்சம்.

**விண்ணகரம் வரதன்**

Varadhan1950@yahoo.com

**98840 72832**

**Vinnagarathan.blogspot.in**

# ஸ்ரீ வைஷ்ணவம்

## *ஓர் எளிய அறிமுகம்*

அகாரவாசியான எம்பெருமான் ஸ்ரீமன் நாராயணன் நம்மையெல்லாம் காப்பதற்காக பலவிதமான அகடிதகனா கார்யங்கள் செய்கின்றான். கிணற்றிலே விழுந்த குழந்தையை காப்பற்ற தாய் தானும் குதிப்பதுபோலே, தானே அவதாரம் செய்கின்றான். அவனது அவதார ரஹஸ்யத்தை அறிந்துகொள்பவன், இந்த ஜன்மத்திலேயே ப்ராரப்த கர்மா முடிந்து மோட்சம் அடைகிறான். "**அஜாயமானோ பஹூதே விஜாயதே**" என்பது புருஷ ஷூக்தத்தில் வருகிற ஒரு மந்திரம். இதன் அர்த்தம் பிறப்பே இல்லாத எம்பெருமான் பலப்பல பிறவிகள் எடுக்கிறான். இதற்கு காரணம், தன்னால் படைக்கப்பட்ட ஜீவன் தன்னிடம் பத்திரமாக வந்து சேர வேண்டிய அவசியம் அவனுக்கு உண்டு. உரிமையாளனுக்குத்தானே, உடைமையின்

அவசியம் புரியும்.அதன் பொருட்டே வேத சாஸ்திரங்களை படைத்தான். தானே பல அவதாரங்கள் எடுக்கின்றான். ஒர் ஆளைப்பிடிக்க ஒரு ஊரையே வளைக்குமாப்போலே, மயற்வற மதி நலம் அளித்து ஆழ்வார்களைப் படைத்தான். ஸ்ரீயப்பதியாகிய எம்பெருமான் ஸ்ரீமன் நாராயணணைத் தவிர, மற்ற எல்லோருமே, ப்ரம்ம ருத்ராதிகள் உட்பட, கர்ம வசத்தாலே பிறக்கின்றனர். எம்பெருமான் மட்டுமே தன்னுடைய வசத்தால் பிறக்கின்றான். அதாவது, தான் யாருக்கு மகனாகப் பிறக்க வேண்டும், தனது தாய் தந்தையர்கள் யாராக இருக்க வேண்டும் என்று யாவற்றையும் முடிவு செய்த பிறகே பிறக்கின்றான். அவனது பிறப்பையே அவதாரம் என்கிறோம். இவ்வாறு, அவனது அவதார ரஹஸ்யத்தை அறிந்துகொள்பவன், இந்த ஜன்மத்திலேயே ப்ராரப்த கர்மா முடிந்து மோட்சம் அடைகிறான்

1. ஒரு பொருளை உள்ளது உள்ளபடியே அறிய உதவுவது ப்ரமாணம் எனப்படும். அவை ப்ரத்யக்ஷம், அனுமானம், சப்தம் எனப்படும். இதில் சப்தம் எனப்படுவது வேதத்தைக் குறிக்கும். எம்பெருமான் ஸ்ரீமன் நாராயணனை, ப்ரத்யக்ஷமாகவோ, அனுமானத்தாலோ அறிய முடியாது. ரிக், யஜுர், சாம, அதர்வணம் என்னும் நான்கு வேதங்களில் சொல்லப்பட்ட விஷயங்களால் மட்டுமே அறிய முடியும். **'எல்லா வேதங்களாலேயும் அறியப்படுபவன் நானே'** என்று ஸ்ரீமத் பகவத் கீதையில் பகவான் கூறியுள்ளார். இது ஒரு புருஷனாலே உண்டாக்கப் படாததால், அபௌர்ஷேயம் எனப்படும். வேதங்கள் எம்பெருமானின் மூச்சுக் காற்று. நமது ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தம் வேதத்தை அடிப்படையாகக் கொண்டது. இதில் சொல்லப்படாத விஷயங்களே இல்லை. உலகிலேயே மிகப்பழமையான ஆன்மீக நூல் வேதம் ஆகும். வேதங்களை கர்ம காண்டம் அல்லது பூர்வ காண்டம் என்றும் ப்ரம்ம காண்டம் அல்லது உத்திர காண்டம் என்று பிரிப்பர். ப்ரம்ம காண்டத்தை உபனிஷத்துக்கள் என்றும் கூறுவர். ஆத்ம, பரமாத்ம தத்துவங்களையும், இப்ரபஞ்சத்தின் முழு உண்மையையும் அறிவதற்கு வேத சாஸ்த்ரங்களே நமக்கு தஞ்சம்.

2. கர்ம காண்டம் எனப்படுவது, யாகம், யக்ஜம், வேள்வி, தானம், தவம் முதலியவற்றை பற்றியும் அவற்றைச் செய்யும் முறைகளைப் பற்றியும் விவரிக்கிறது. ப்ரம்ம காண்டம் எனப்படுவது, அந்த யாகம், யக்ஜம், வேள்விகள் யாரைக்குறித்து செய்யப்படுகிறதோ, அந்த எம்பெருமானைப் பற்றியும், அவனது கணக்கற்ற கல்யாண குணங்களையும், அவனது திவ்ய மங்கள விக்ரக திருமேனி பற்றியும், அப்பெருமானின் விபூதிகள் மற்றும் அவனை அடையக்க்கூடிய உபாயங்களையும் கூறுகின்றது.

3. ப்ரம்ம காண்டம் என்று சொல்லப்படுகிற உபனிஷத்துக்களுக்கு, ரிஷிகளால் இயற்றப் பட்ட இதிஹாசங்களும், புராணங்களும் வழி நூல்களாக கொள்ளப்படுகிறது. இராமாயணம், மஹாபாரதம் ஆகிய இரண்டும் இரு பெரும் இதிஹாசங்கள். ஆகும். இதிஹாசங்களென்பது, அவை நடந்த கால கட்டத்திலேயே எழுதப்பட்டது. அதாவது இராமாயணம், வால்மீகி முனிவராலேயும், மஹாபாரதம் வியாச பகவானாலேயும், அவை நடந்த காலத்திலேயே எழுதப்பட்டது. புராணங்கள், ரிஷிகளாளேயும், முனிவர்களாலேயும் எழுதப்பட்டது. அவை பதினெட்டு புராணங்களைக் கொண்டது.

புராணங்களில் சிறந்தது ஸ்ரீ விஷ்ணு புராணம். இது புராண ரத்னம் என்று சொல்லப் படுகிறது. வேதங்களின் உத்தர பாகமான உபனிஷத்துக்களை இதிஹாச புராணங்களைக் கொண்டே அறிய வேண்டும்.

4. உபனிஷத்துக்கள் 108 வகைப்படும். அவற்றில் பத்து உபனிஷத்துக்கள் முக்யமானவை. அதிலும் முக்யமானது **'ஈசாவஸ்ய'** உபனிஷத் எனப்படும். 'ஈசா என்பது ஈஸ்வரனாகிய எம்பெருமானைக் குறிக்கும். வாஸ்யம்' என்றால் வஸ்த்திரம் என்று பெயர். இந்தப் ப்ரபஞ்சம் முழுவதையும் எம்பெருமான் ஒரு வஸ்த்திரத்தைப் போல் உடுத்திக்கொண்டு இருப்பதால் 'ஈசாவஸ்யம் என்று இந்த உபனிஷத் கூறுகிறது. இதுவே விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தில் கூறப்பட்டுள்ள 'சரீர, சரீரி, பாவம்" இதுவே நமது சித்தாந்தத்தின் ஆணி வேர். இதை உபயவேதாந்தம், ராமானுஜ ஸம்ப்ரதாயம், சாரீரக சாஸ்த்ரம், எம்பெருமானார் தர்சனம் என்றும் கூறுவர்.

5. **ப்ரதான ப்ரதிதந்த்ரம்:** ஒவ்வொரு கட்சிக்கும் ஒரு கொள்கை இருப்பதுபோல், ஒவ்வொரு மதத்திற்கும் ஒரு கொள்கை உள்ளது. இதற்கு 'ப்ரதி தந்த்ரம்' என்று பெயர். எல்லா மதங்களும் ஒரு விஷயத்தில்

ஒத்துப்போனால், அதற்கு ' சர்வ தந்த்ரம்' என்று பெயர். உதாரணமாக, அஹிம்சை பெரும்பாலும் எல்லா மதத்தினராலும் ஒப்புக் கொள்ளப்படுகிறது.

விசிஷ்டாத்வைத சித்தாந்தம் ' ப்ரதான ப்ரதிதந்த்ரம்' என அழைக்கப் படுவதற்கு காரணம், 'தனது கொள்கையை விளக்குவது மட்டுமல்லாமல், வேதங்களில் எந்த பாகத்திற்கும் விரோதமில்லாமல் எல்லா பாகங்களையும் எடுத்துக்கொள்கிறது. ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தை ஒப்புக்கொள்ளாத அனைத்து சித்தாந்தங்களையும் மறுக்க முடியும். சரீர,சரீரீ பாவம் என்கிற கருத்து இந்த விசிஷ்டாத்வைதத்தில் ப்ரதான ப்ரதி தந்த்ரமாகும். இதனை சேஷ, சேஷி பாவம் என்றும் கூறுவர். எவன் ஒருவன் அல்லது எந்த ஒரு வஸ்து வேறு ஒருவனுக்கு இயற்கையாகவே உபயோகப்படும்படி உள்ளானோ அல்லது உள்ளதோ அது சேஷம் எனப்படும். மற்றவர் சேஷி ஆகிறார்.

6. வேதேஷு பௌருஷம் சூக்தம் என்பதன் மூலம் வேதங்களில் மிகச்சிறந்தது 'புருஷ சூக்தம் என்று அறியப்படுகிறது. இந்த புருஷசூக்தம் எம்பெருமான் ஸ்ரீமன் நாராயணனாலேயே, இந்திரனுக்கு உபதேசிக்கப் பட்டதாக உபனிஷத் கூறுகிறது. இது பதினாறு ருக்குகளைக் கொண்டது. இதில் எம்பெருமான் ஸ்ரீமன் **நாராயணனே பரம்பொருள்**

**என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது.** இந்த ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டியும் பரமபுருஷனான சாஷாத் விஷ்ணுவே சர்வ வ்யாபகத்தன்மை உடையவன் என்றும் இந்தக் கருத்தை உணர்ந்து எவன் ஏற்றுக்கொள்கிறானோ, அவனே மோஷத்தை அடைகிறான் என்பதே புருஷசூக்தத்தின் மையக்கருத்து.

இருளுக்கு அப்பாற்பட்டவரும், மிகப்பெரியவரும், சூர்யனின் உஷ்ணத்தை உடையவருமான அந்த பரமபுருஷனை நான் அறிவேன். அவனை இவ்விதமாக அறிந்தவன் இப்பிறவியிலேயே மோஷம் அடைகிறான். இதைத்தவிர, மோஷத்துக்கு வேறு வழியில்லை என்று வேத புருஷன் கூறுவதாக சொல்லப்பட்டுள்ளது. இதையேதான் ஐந்தாவது வேதம் என கூறப்படும் ஸ்ரீமத் பகவத் கீதையில் **"எவன் என்னுடைய அவதார ரஹஸ்ய ஞானத்தை உள்ளவாறு அறிகிறானோ, அவன் இப்பிறவியிலேயே மோஷம் அடைகிறான்"** என்கிறார் பகவான் ஸ்ரீ க்ருஷ்ணன்.

7. நமது பூர்வாசார்யர்கள் சுருங்கச்சொல்லி விளங்க வைப்பதில் சமர்த்தர்கள். கடுகுக்குள் கனகமலையை புகுத்துவதுபோலே. அஞ்சைச்சுருக்கி மூன்றாக்கி, மூன்றை சுருக்கி ஒன்றாக்கி என்பர். இதில் அஞ்சு என்பது

அர்த்தபஞ்சகத்தையும், மூன்று என்பது தத்வம், ஹிதம், புருஷார்த்தம் என்பதையும் ஒன்று என்பது "ஓம்" எனும் ப்ரணவ மந்திரத்தையும் குறிக்கும். அர்த்த பஞ்சகம் என்பது எம்பெருமானைப்பற்றி அறிவது. எம்பெருமானைப்பற்றி அறிந்து கொள்ள, அவனை அடைவதைக் குறிக்கும் ஐந்து உயர்ந்த நிலைகளை விவரிப்பது. ஸ்ரீயப்பதியாகிய, எம்பெருமானை அடையக்கூடிய வழிகளைக்காண்பிப்பது அவையாவன:

1. எம்பெருமான் இருக்கும் மிக உயர்ந்த நிலை.

2. ஜீவன்களாகிய நாம் இருக்கும் மிக தாழ்ந்த நிலை.

3. எம்பெருமானை அடையக்கூடிய வழிகள்.

4. எம்பெருமானை அடைய தடுக்கும் தடைகள்.

5. எம்பெருமானை அடைந்தபிறகு ஏற்படும் ப்ரம்மானந்தம்.

இவை ஐந்தையும் சுருக்கி தத்வம், ஹிதம், புருஷார்த்தம் என்று மூன்றாக கூறுவர். முதல் இரண்டு நிலைகள் "தத்வம்" என்றும், மூன்று மற்றும் நான்கு நிலைகள் "ஹிதம்", அதாவது வழிகள் மற்றும் தடைகளைக் கூறுவது. **அந்த வழிகளாவன:** கர்ம யோகம், ஞான யோகம், பக்தி யோகம் மற்றும் ப்ரபத்தி ஆகும். **அந்த தடைகளாவன:** அவித்யை, அஞ்ஞானம், விபரீத ஞானம் போன்றவை. ஐந்தாவது நிலை புருஷார்த்தம் எனப்படும் மோக்ஷ

சாம்யத்தைக் குறிக்கும். இதை மீண்டும் ஒன்றாக சுருக்கி, ஓம் எனும் அஷ்டாக்ஷர மந்திரமாக கூறுவதுண்டு.

8.தத்வம், ஹிதம், புருஷார்த்தம் என்று மூன்று தத்துவங்களைப் பார்த்தோம். இதில் தத்வம் எனும்போது, சித், அசித், ஈஸ்வரன் என்ற மூன்று தத்துவங்களைப் பார்ப்போம். சித் எனும் தத்வம், ஆத்மா, ஜீவன், சேதனன் என்று பலவகைகளால் அழைக்கப்படும். இந்த சித், உடலைக்காட்டிலும், புலன்களைக் காட்டிலும், மனஸைக் காட்டிலும் ப்ராணணைக் காட்டிலும் வேறுபட்டது. ஓர் உடலின் ஹ்ருதயத்தில் இருந்துகொண்டு, ஓர் விளக்கு ஓரிடத்தில் இருந்தாலும் அதன் ஒளி எங்கும் பரவுவதுபோல், உடலெங்கும் வ்யாபிக்கிறது. சித் எனும் ஆத்மா, மாறுபாடற்றவன். எப்போதும் ஒரே விதமாக உள்ளவன். ஆகவே, அதை வெட்டவோ, நனைக்கவோ, உலர்த்தவோ, எரிக்கவோ முடியாது.
இந்த சித் எனும் ஆத்மா, பக்தர், முக்தர், நித்யர் என மூவகைப்படும். பக்தர்கள் என்பவர்கள், சம்சாரிகள். தங்கள் வினைப்பயன் காரணமாக, தேவ, மனுஷ்ய, தாவர, மிருக உடல்களைப் பெற்றும், தங்கள் புண்யம், பாபம் என்னும் வினைப்பயன் பொருட்டு இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றனர்.
முக்தர் எனும் ஆத்மா, மோக்ஷத்தில் விருப்பம் கொண்டு, அதற்கான சாதனங்களை மேற்கொண்டு,

ஈஸ்வரன் அருளால் பரமபதம் அடைந்து கைங்கர்யம் செய்து கொண்டிருப்பவர்கள். நித்யர் எனும் ஆத்மாக்கள், ஒரு நாளும் இந்த சம்சார பந்தம் இல்லாதவர்கள். விஸ்வக்சேனர், ஆதிசேஷன், கருடன் முதலானவர்கள்.

அசித் எனும் தத்வம், எப்போதும் மாறுபடும் தன்மையை உடையது. இவை ஐம்பூதங்கள், ஐம்புலன்கள், ஐந்து கர்மேந்த்ரியங்கள், ஐந்து ஞானேந்த்ரியங்கள், மற்றும் ப்ருக்ருதி, அஹங்காரம், மஹங்காரம், மனஸ் ஆகிய 24 விதமாக மாறுதலை அடைகிறது.

ஈஸ்வரன் எனும் தத்வம், எம்பெருமான் ஸ்ரீமன் நாராயணனின் ஸ்வரூபத்தையும், திவ்ய மங்கள விக்ரஹத்தையும், எண்ணிலடங்காத கல்யாண குணங்களையும் விவரிக்கிறது. ஈஸ்வரனுடைய ஸ்வரூபத்தை விளக்குவது சத்யத்வம், ஞானத்வம், அனந்தத்வம், ஆனந்தத்வம் மற்றும் அமலத்வம் ஆகிய ஐந்து குணங்கள். இவை ஸ்வரூப நிரூபிக தர்மங்கள் என்று பெயர் அதாவது, எம்பெருமானது ஸ்வரூபத்தை நிரூபிக்க உதவும் குணங்கள். அவ்வாறு நிரூபிக்கப்பட்ட ஸ்வரூபத்தின் குணங்களைக் கூறுவது நிரூபித ஸ்வரூப விசேஷணங்கள் என்று பெயர். அவையாவன. ஞானம், பலம், ஐஸ்வர்யம், வீர்யம், சக்தி தேஜஸ்.

இவை பகங்கள் எனப்படும். எனவேதான், பகவான் என்று கூறுகிறோம். இந்த குணங்கள் பிராட்டிக்கும் உண்டாதலால், பகவதி எனப்படுகிறாள். இவை தவிர, பக்தர்களுக்கு அருள் புரிவதற்கு, எம்பெருமானுக்கு, கணக்கில்லாத (அசங்க்யேய) கல்யாண குணங்கள் உண்டு. அவை சுருக்கமாக, ஸௌலப்யம், ஸௌசீல்யம், ஆர்தவம், மார்ஜவம், காருண்யம், மாதுர்யம், வாத்சல்யம், ஸௌஹார்த்தம், காம்பீர்யம், ஔதார்யம், சாதுர்யம், தைர்யம், சத்யகாமத்வம், சத்யசங்கல்பம் போன்றவையாகும்.
ஆக இந்த சித், அசித்,ஈஸ்வரன் ஆகிய மூன்று தத்வங்களும் சேர்ந்து, 'தத்வத்ரயம்" எனப்படும்.

9. மூன்று தாழிகளிலே தயிரை நிறைத்து அதைத் தனித்தனியே கடைந்து வெண்ணை திரட்டினால், அந்த வெண்ணையானது, மூன்று தாழித் தயிரின் சாரம் என்று சொல்லலாம். அதுபோல, ப்ரணவம் என்பது 'ஓம்' என்னும் பதமாகும். அது 'அ', உ, ம என்ற மூன்று அஷரங்களின் சேர்க்கையாகும். அ' என்பது அகாரவாசியான எம்பெருமானைக் குறிக்கும். ம' என்னும் எழுத்தால் ஜீவாத்மாவை சொல்லப் படுகிறது. உ' என்பது "மட்டுமே" என்ற பொருளைத் தருவது. அதாவது, ஜீவனாகிய சேதனன் எம்பெருமானுக்கு 'மட்டுமே' அடிமைப்பட்டவன், பிறர்க்கு உரியவன் அல்லன் என்று பொருள் படும்.

அகாரத்தால் தெரிவிக்கப்படும் எம்பெருமானுக்கே, மகாரத்தால் தெரிவிக்கப்படுகின்ற ஜீவாத்மாவானவன் அடிமைப்பட்டவன் என்ற அனன்யார்ஹ சேஷத்வத்தை விவரிக்கிறது. இந்த தத்துவங்களைப்பற்றி எண்ணுவதே ப்ரம்ம விசாரம் எனப்படும்.

10. ரஹஸ்யத்ரயம் என்பது மூன்று ரஹஸ்ய அர்த்தங்களைக் கொண்டது. **"ஓம் நமோ நாராயணாய நம:"** என்கிற அஷ்டாஷரம், **"ஸ்ரீமன் நாராயணாய சரணௌ சரணம்"** என்று ஆரம்பிக்கும் த்வய மந்திரம், மற்றும் **"சர்வ தர்மான் பரித்யச்ச...."** என்று ஆரம்பிக்கும் சரமஸ்லோகம் ஆகும். இதை ரஹஸ்யம் என்று



கூறுவதர்க்கு காரணம், ஆழ்ந்த அரிய பெரிய பொருள்களையுடையதாதலால், நம் பூர்வாசார்யர்கள், பரம க்ருபையாலே, தம்மடி பணிந்தார்க்கும், விருப்பப் பட்டவர்களுக்கும், விரும்பிக்கேட்பவர்களுக்கு மட்டும், ஏகாந்தமாகவும் அருமருந்தாகவும் உபதேசித்து வந்தார்கள். ஸ்ரீ பகவத் ராமானுஜர் தம்முடைய விசாலமான திருவுள்ளத்தினால் சகல சம்சாரிகளும் உய்யும் வழியாக, வரம்பு கடந்து, தாமும் தமது

சிஷ்யர்களைக் கொண்டும் இதை ஆசைப்பட்டோர்க்கெல்லாம் உபதேசித்து வந்தார்.

11. முமுஷுக்கள் அறியவேண்டியது மூன்று என்கிறார் பிள்ளைலோகாசாரியார். மோஷத்தை மட்டும் விரும்புவர்கள் முமுஷுக்கள் எனப்படுபவர். அத்தகைய ப்ரபன்னர்கள் பரமாத்மா, ஜீவாத்மா, இவர்களுக்கிடையே உள்ள வித்யாசங்களை தெரிந்து கொண்ட பின்பு, பரமாத்மாவையே அடைய வேண்டும் என்று விரும்புவர். அதுவே, அவர்களது உயர்ந்த குறிக்கோள். அதை அடைவதற்க்கு பக்தி மார்கத்தையோ அல்லது ப்ரபத்தியையோ அனுஷ்டிக்கவேண்டும். இவை மட்டுமே உபநிஷத்துக்களில் கூறப்பட்டுள்ள உத்தமமான பாகம். அவற்றில் தத்துவங்களையும், ஹிதங்களான வழிகளையும் தன்னுள் உள்ளடக்கி வைத்திருக்கும் மூன்று ரஹஸ்ய மந்திரங்களான திரு அஷ்டாஷரம், த்வயம், சரம ஸ்லோகம். இவை மூன்றுமே முமுஷுக்கள் அறியவேண்டிய மூன்று.

12. மந்திரங்களில் மிகச்சிறந்தது த்வய மந்திரம் எனப்படும். "**ஸ்ரீமன் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே. ஸ்ரீமதே நாராயணாய**" என்பது. இரண்டு வரிகளைக் கொண்ட இந்த த்வய மந்திரத்தின் முதல் வரியின் அர்த்தம், பிராட்டியுடன் கூடிய எம்பெருமானின் இரு திருவடிகளே உபாயம் மற்றும்

உபேயம் ஆகும். அதாவது, அடையவேண்டிய பொருள் மற்றும் அடையவேண்டிய வழி இரண்டுமே எம்பெருமானின் திருவடிகளே ஆகும்.

இரண்டாவது வரியில் ஆரம்பிக்கும் "ஸ்ரீ மதே நாராயணாய" என்பது பிராட்டி, எம்பெருமான் இருவரும் சேர்ந்த சேர்த்தியில், சர்வ தேச, சர்வ காலத்திலும், சகலவிதமான நித்ய கைங்கர்யங்களும், ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யவேண்டும் என்கிற கைங்கர்யப் ப்ராப்தியை வேண்டுவதே ஆகும். த்வய மந்திர சப்தத்தை தவிர, மற்ற சப்தங்கள் எல்லாம் சமுத்ர ஓசையே என்று பிள்ளை லோகாச்சாரியார் கூறுகிறார். இந்த த்வய மந்திரத்தை எப்போது வேண்டுமானாலும், எந்த காலத்திலேயும், யார் வேண்டுமானாலும் சொல்லலாம். கால, அதிகாரி நியதிகளைக் கடந்தது இந்த மந்த்ரம்.

13. நமது சம்ப்ரதாயத்தில் 'சரம ஸ்லோகம் என்பது மூன்று இடங்களில் சொல்லப்பட்டுள்ளது. **'சரம' என்றால் கடைசி என்று பொருள்.**

முதலில், வராஹஅவதாரத்தில், லக்ஷ்மியிடம், எம்பெருமான் கூறியது. "எவனொருவன், தனது உடல் நிலை நல்ல நிலையில் இருக்கும்போது, என்னையே நினைத்துக்கொண்டு இருக்கின்றானோ,

அவனது கடைசி காலத்தில், மூச்சு, பேச்சின்றி, நாக்கு தடுமாறும் நிலையில், மரக்கட்டையாக இருக்கும்போது, என்னை நினைக்கத் தேவை இல்லை. **அதாவது அந்திம ஸ்ம்ருதி தேவையில்லை. நானே அவனை வந்து இதைவிட வேறு பரமமான கதி இல்லை என்ற இடத்திற்கு** கூட்டிச்செல்வேன். "அஹம் ஸ்மராமி மத்பக்தம், நயாமி பரமாம்கதிம்" என்கிறார்.



**இரண்டாவதாக,** ராமாவதாரத்தில், விபீஷண சரணாகதியின் போது, "எவ்னொருவன், என்னை நண்பன் என்று சொல்லிக்கொண்டு வருகிறானோ, அவனை, அவன் யாராக இருந்தாலும், ராவணனாகவே இருந்தாலும் அவனை காப்பது



எனது விரதம்" என்கிறார்.

**மூன்றாவதாக** கிருஷ்ணாவதாரத்தில், குருஷேத்ர போர்க்களத்தில், தேர்த்தட்டில், "**சர்வ தர்மான் பரித்யச்ச மாம் ஏகம் சரணம் வ்ரஜ**" என்று எல்லா கர்மங்களையும் விட்டுவிட்டு, அதாவது, அவை மோஷத்திற்க்கு சாதனம் என்கிற எண்ணத்தை விட்டு, என்னையே சரணமடைந்தால், மோஷத்துக்கு தடையாயிருக்கும் உன் பாபங்களைப்போக்கி, மோஷம் அளிக்கிறேன் என்கிறார்.



14. நமது சம்ப்ரதாயத்தில், ரஹஸ்யத்ரயத்தை யார் உபதேசிக்கிறார்களோ, அவர்தான் ஆசார்யன். குருப் பரம்பரையில் முதல் ஆசார்யன், திருவரங்கம் பெரிய கொயிலில் சயனித்திருக்கும் ஸ்ரீரங்க நாதனாகிய



எம்பெருமான் தான் ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாயத்தின் ப்ரதம ஆசார்யன்.

குருபரம்பரையில் இரண்டாவது ஆசார்ய ஸ்தானம் திருவரங்கம் பெரிய கோவிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீரங்க நாச்சியாருக்குத் தான்.



எவ்வாறெனில், பகவான் பத்ரிகாஸ்ரமத்தில், தானே ஆசார்யனுமாய், தானே சிஷ்யனுமாய் நின்று திருமந்திரத்தை உபதேசித்தான். த்வய மந்திரத்தை பெரிய பிராட்டிக்கு பரமபதத்தில்,

அவனே உபதேசித்தான். சரம ஸ்லோகத்தை அர்ஜுனனுக்கு தேர்த்தட்டில் கண்ணபிரானாக உபதேசித்தான். இம்மூன்று ரஹஸ்யங்களையும் பண்ணினது பகவானேயானாலும், வெவ்வேறு இடங்களில், வெவ்வேறு பேருக்கு உபதேசம் செய்யப்பட்டது. ஆனால் திருவரங்கம் பெரிய கோயிலில், பெரிய பெருமாள், பெரிய பிராட்டியான ஸ்ரீரங்க நாச்சியாருக்கு, இந்த மூன்று ரஹஸ்யங்களையும் ஏக காலத்தில் உபதேசித்ததால், பெரிய பெருமாள் ஸ்ரீ ரங்க நாதர் தான் நமது குருபரம்பரையின் முதல் ஆசார்யன் ஆகிறார். பெரிய பிராட்டியார், சேனை முதலியாருக்கு இந்த மூன்று ரஹஸ்யங்களை ஏக காலத்தில் திருவரங்கத்தில் உபதேசித்தாள். அதனால் ஸ்ரீரங்கநாச்சியாருக்கு குருபரம்பரையில் இரண்டாவது ஸ்தானம். இந்த காரணத்தினாலேயும், **ஸ்ரீரங்கம் தலையாய திவ்யதேசமாகக் கொண்டாடப் படுகிறது.**

15. ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாயத்தின் தனிச் சிறப்பு அதன் குரு பரம்பரை. இந்த ஸ்ரீவைஷ்ணவ மதத்தை வளர்க்க யாராரெல்லாம் பாடு பட்டார்களோ, அவர்களை நம் நினைவில் கொள்வதற்கு இந்த் குரு பரம்பரை உதவுகிறது. பெரிய பெருமாள் ஸ்ரீ ரங்கனாதரை ப்ரதமாசார்யராகக் கொண்டு வழி வழியாக ஆசார்யர்கள் முதல், இன்றைக்கு

எழுந்தருளியிருக்கும் ஆசார்யர் வரை குரு பரம்பரை கூறுகிறது.




பெரிய பெருமாள், பெரிய பிராட்டியார், சேனை முதலியார், நம்மாழ்வார், நாதமுனிகள், உய்யங்கொண்டார், மணக்கால் நம்பிகள், ஆளவந்தார், பெரிய நம்பிகள் என்று எம்பெருமானருக்கு முன்பு ஒன்பதிமரும், அவருக்குப் பிறகு எம்பார், கூரத்தாழ்வான், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்கு திருவீதிப் பிள்ளை, பிள்ளைலோகாசார்யர், திருவாய்மொழிப்பிள்ளை, மணவாள மாமுனிகள் என்று ஒன்பதிமரும்

உள்ளனர். இதில் நடு நாயகமாய் எம்பெருமானார் எழுந்தருளியுள்ளார். அதன் பிறகு எம்பெருமானார் ஏற்படுத்திய எழுபத்து நான்கு சிம்ஹாஸனாதிபதிகள்,, மற்றும் அஷ்டதிக்கஜாசார்யர்கள் என்று ஒரு மஹா வ்ருஷம் போல் குரு பரம்பரை விளங்குகிறது இது நமது தற்போதுள்ள ஆசார்ய பரம்பரை வரை தொடர்கிறது.

16. எம்பெருமான் ஸ்ரீமன் நாராயணன் பக்தர்களுக்கு அனுக்ரஹிக்க ஐந்து நிலைகளில் உள்ளார் என்று பாஞ்சராத்ர ஆகமம் சொல்கிறது. அவை பரத்வம், வ்யூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரம் என்பதாம். **பரத்வமாவது** வைகுண்டம் என்கிற பரமபதத்தில் நித்யர்களுக்கும், நித்யமுக்தர்களுக்கும் எழுந்தருளியிருக்கும் நிலை. **வியூகமாவது**, லீலாவிபூதியின் படைப்பு, காப்பு மற்றும் அழித்தலும் ஆன செயல்களை செய்வதற்காகவும், வேண்டியவற்றை விரும்புவோர்க்கு கொடுப்பதற்க்கும் திருப்பாற்கடலில் அமர்ந்த நிலை. தேவர்கள் தமது குறைகளை இங்கு வந்து முறையிடுவதால், கூப்பிடு கேட்கும் உலகு என்றும் கூறுவர். **விபவமாவது** சாதுக்களை ரஷிக்கவும், துஷ்டர்களை நாசமடைய செய்யவும், தர்மங்களை நிலை நிறுத்தவும் செய்கின்ற ராமர், க்ருஷ்ணர், நரசிம்ஹம் போன்ற அவதாரங்கள்.

அந்தர்யாமித்வமானது ஜீவங்களுடைய ஹ்ருதயங்களில் அழகிய திருமேனியோடும், கட்டை விரல் அளவோடும் கூடியவனாக "ப்ரஜாபதிஸ் சரதி கர்ப்பே அந்த:" என்று எழுந்தருளியிருக்கும் நிலை. அர்ச்சாவதாரமாவது அடியவர்கள் விரும்பிய வண்ணம், அவர்கள் உகந்து எழுந்தருளப் பண்ணிய திருவுருவங்களில் தான் உட்புகுந்து, தன்னை அர்ச்சிக்கும் அவர்களுக்கு வேண்டியவற்றை அருளிச் செய்து கோயில்களிலும் க்ருஹங்களிலும் எழுந்தருளியிருக்கும் நிலை.

17.சரணாகதி என்பது ஐந்து அங்கங்களைக்கொண்டது.

I. எம்பெருமான் ஸ்ரீமன் நாராயணனே சர்வ ரஷகன் என்ற நினைப்பு.
II. அவன் மட்டுமே நம்மைக்காப்பான் என்கிற மஹாவிஸ்வாசம்.( உன்னாலல்லால் வேறு யாவராலும் குறை வேண்டேன்)
III. நம்மால் மற்றும் நம் முயற்ச்சியால் ஆவது ஒன்றும் இல்லை எங்கிற ஆகின்ச்யம் (நமது கையாலாகத்தனம்) ஸ்வயத்தனம் மற்றும் ஸ்வரஷணம் என்பது நமது ஸ்வரூபத்துக்கு விரோதி.
IV. அனுகூல சங்கல்ப்பம்- எம்பெருமானையும் அவன் வகுத்த சாஸ்திரங்களை மட்டுமே சார்ந்திருப்பேன் என்கிற சங்கல்பம்.
V. ப்ரதிகூல்ய வர்ஜனம் - எப்பொழுதும்

எம்பெருமான் வகுத்த சாஸ்திரங்களிருந்து எந்த காரணத்தைக் கொண்டும் வழி தவற மாட்டேன் என்ற சங்கல்பம்.

இவை ஐந்தையும் சேர்த்து, ஆறாவதாக ஆத்ம சமர்ப்பணம் செய்யவேண்டும். இவை ஐந்தும் சரணாகதிக்கு தேவையான அடிப்படை எண்ணங்கள். இது மட்டுமே சரணாகதியாகாது. ஆனால் இது, பலப்பல ஜன்மங்களாக நாம் செய்த கர்ம வினைகளால் எம்பெருமானுக்கு நம்மீது ஏற்பட்ட சீற்றத்தை குறைப்பதற்கு இவை உதவும்.

ஆத்ம சமர்ப்பணம் என்பது பிராட்டியை முன்னிட்டுகொண்டு, எம்பெருமான் திருவடிகளையே உபாயமாகவும் உபேயமாகவும் பற்றிக்கொள்வது. இதுவே சரணாகதியாகும்.

18. எம்பெருமான் ஸ்ரீமன் நாராயணனே சர்வ ரக்ஷகன் என்கிற மஹாவிஸ்வாசம் ஏற்படுகிறபோது நமக்கு ஆகிஞ்சயம் (நமது கையாலாகத்தனம்) வெளிப்படுகின்றது. அதனால் அவனிடம் அனுகூல சங்கல்ப்பமும், ப்ரதிகூல வர்ஜனமும் உண்டாகிறது. இந்த ஐந்து நிலைகளுமே சரணாகதிக்கு அடிப்படையாகிறது.

19. மஹாப்ரளயம் என்று சொல்லப்படும் ஊழிக்காலத்தில் உண்டும் உமிழ்ந்தும் நம்மைக்காக்கும் எம்பெருமான் ஸ்ரீமன் நாராயணனே

பர தெய்வம் மற்றும் பரம்பொருள். மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடியவன் முகுந்தன் மட்டுமே. மற்ற எல்லா தெய்வங்களும், தேவதைகளும், எல்லா செல்வங்களையும் கொடுக்ககூடிய வல்லமை பெற்றிருந்தாலும், அவை



எல்லாம் அழியக்கூடியவை மற்றும் மாறக்கூடியவையே. மஹா ப்ரளயத்தின் போது எம்பெருமான், நித்ய சூரிகள், நித்ய முக்தர்கள் மட்டுமே மிஞ்சுவர். மற்ற யாவரும், ப்ரம்மருத்ராதி உட்பட, எல்லா தெய்வங்களும் மறைந்து பின்னர் மீண்டும் தோற்றுவிக்கப்படுவர். இது வேதங்களிலும், பகவத் கீதையிலும் சொல்லப்பட்ட விஷயம்

20. எம்பெருமானின் அவதார ரஹஸ்யத்தின் ஆறு விஷயங்கள் பகவத் கீதையில் 4.5-4.9 கூறப்பட்டுள்ளன.

1. பகவானின் அவதாரம் இந்திர ஜாலம் போல் பொய்யல்ல. உண்மையாக அவதரிக்கிறான்.

2. அவதார காலத்தில், அவன் திருமேனிக்கோ, ஞானத்துக்கோ வாட்டமில்லை.

3. தர்மத்தை ஸ்தாபனம் பண்ணுகிறான். அதர்மத்தை நிரசனம் பண்ணுகிறான்.

4. அவனது அவதாரம் கர்ம வசப்பட்டதல்ல. அவனது சங்கல்பமே காரணம்.

5. சாது சம்ரக்ஷணம் பண்ணுகிறான்.

6. துஷ்க்ருத் வினாசனம் பண்ணுகிறான்

எம்பெருமானின் அவதார ரஹஸ்யத்தை இவ்வாறு எவன் அறிகிறானோ அவன் சரீரத்தை விட்ட பிறகு, மறுபிறவி அடைவதில்லை. (மோக்ஷம் பெறுகிறான்.)

21. **உடல் வேறு, ஆத்மா வேறு என்பதை அறிந்து கொள்ளவேண்டும்.** சித்' என்கிற ஆத்மாவானது உடலைக் காட்டிலும், புலங்களைக் காட்டிலும், மனசைக் காட்டிலும், ப்ராணனைக் காட்டிலும், வேறுபட்டது. அது தன் அறிவால் உடலெங்கும் வ்யாபிக்கிறது. ஒரு பசுவின் வாலில் காணப்படும் ஒரு முடியின் நுனியை நூறு பாகமாகச் செய்து, அதில் ஒரு பாகத்தை மறுபடியும் நூறு பாகமாகச் செய்தால் வரும் அளவு ஒரு ஆத்மாவின் அளவைக் காட்டும் என்று வேத வாக்யம் கூறுகிறது. ஆத்மா நித்யமானது. அதற்கு அழிவில்லை. உடலுக்கு அழிவு உண்டு. உடல் சரிந்தபின் ஆத்மா மற்றும் வேறு உடலை அடைந்து தன் கர்ம வினயைப் போக்கிக்கொள்கிறது. ஒவ்வொரு உயிரினுள்ளும் அணுஅளவாக சிறகு முளைக்காத பறவைக் குஞ்சுபோல், இந்த ஆத்மாவானது தங்கியுள்ளது

இந்த ஜீவனையே 'ஜீவாத்மா' என்று அழைப்பர். பரமாத்மாவான எம்பெருமானை அடைவதே இந்த ஜீவாத்மாவின் குறிக்கோள்.

**22. ஜீவாத்மா பரமாத்மாவுடன் கலக்கும் நிலையை, பர பக்தி, பர ஞானம், பரம பக்தி என்று மூன்று வகையாகப் பிரிப்பர்.** ஒவ்வொரு ஆத்மாவுக்குள் எழுகின்ற 'இறைவனை நேரில் காணவேண்டும்' என்ற தைலதாரை போன்ற ஆசை பரபக்தி என்பதாம். அவ்வாறு எழும் பரபக்தியின் உந்துதலால், இறைவனை ஞானத்தால், காணப்பெறும் பாக்யமே பர ஞானம், எனப்படும். அந்த ஞானத்தால் கண்ட இறைவனை அடையாமல் தரிக்க முடியாது என்ற நிலையே பரம பக்தி எனப்படும்.

23. ஒரு கிணற்றில் குடமானது மீண்டும் மீண்டும் சென்று நீரைக்கொண்டு வருவதுபோல் இந்த ஆத்மாவாகிய ஜீவன் பிறந்தும், இறந்தும் மீண்டும் பிறந்தும் நடை பெறுகிறது. இந்த மாயை பலப்பல ஜன்மங்களாக நம்மைத் தொடர்ந்து வருகிறது. விருப்பு வெறுப்பு என்பது விரும்பவேண்டிய விஷயங்களில் வெறுப்பும், வெறுக்க வேண்டிய விஷயங்களில் விருப்பமும் ஆகும். இதற்கு இரட்டை மோஹம் என்று கூறுவர். இதை ஒரு முடிவுக்கு கொண்டுவர, மீண்டும் இவ்வுலகில்

பிறக்காமல், ஸ்ரீ வைகுண்டமாகிய பரமபதத்தை அடைவதற்கு, சரணாகதி ஒன்றே சரியான வழியாகும். எம்பெருமானின் அவதார ரஹஸ்யத்தைப் புரிந்து கொண்டு, சரணாகதி செய்து, அர்ச்சிராதி மார்கத்தில் சென்று, எம்பெருமானுடைய நித்ய விபூதி எனப்படும், கலங்காப்பெரு நகரைடைந்து, ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி சமேதரான, ஸ்ரீயப்பதியான, ஸ்ரீமன் நாராயணனுக்கு சகலவிதமான கைங்கர்யம் செய்து கொண்டு இருக்கப் ப்ரார்திக்க வேணும். "இந்த இரட்டை மோகங்களிலிருந்து விடுபட்டு, என்னை முழுமையாக சரணம் அடைபவர்களே, இந்த மாயையிலிருந்து விடுபடுகிறார்கள் என்று பகவத் கீதையில் கிருஷ்ணன் கூறுகிறார். (**மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாம் ஏதாம் தரந்திதே....**).

24. ஒரு ஜீவனுக்கு வரக்கூடிய துன்பங்களை 'ஆதி ஆத்மீகம், ஆதி பௌதீகம், ஆதி தெய்வீகம் என்று மூன்று வகையாக கூறுவர். உடலையும் மனத்தையும் பற்றி வரும் தலைவலி, காய்ச்சல், காமம், பொறாமை முதலியவை ஆதி ஆத்மீகம் எனப்படும். பாம்பு, புலி, சிங்கம் போன்ற கொடிய விலங்குகளால் ஏற்படும் துன்பம் ஆதி பௌதீகம் எனப்படும். இடி, மின்னல், பூகம்பம் எரிமலை முதலிய தெய்வ சங்கல்பங்களால் ஏற்படும் துன்பம் ஆதி தெய்வீகம் என்பர். இவை மூன்றும் சேர்ந்து

'தாபத்ரயம்' என்று சொல்வர். திருவேங்கட நாதனை சரணடைவதன் மூலம் 'மெய்வினை நோய் தீர்ப்பதுவும்' என்று இந்த தாபத்ரயம் விலகும் என்று திருமழிசைப்பிரான் அருளிச் செய்துள்ளார்.

25. கருணாமூர்த்தியான பகவான் ஜீவன்களுக்கு செய்யும் உபகாரங்கள் நான்கு விதமாகும்.

1. ஜீவன் என்கிற ஆத்மாவை அழிவில்லாமல் நித்யமாக வைத்திருப்பது. அப்போதுதான் ஏதாவது ஒரு பிறவியில், எம்பெருமானிடம் ப்ரீதி பிறந்து, அவித்யையும் அஞ்ஞானமும் நீங்கி அவனிடம் சரணம் அடைய முடிகிறது.
2. ஒவ்வொரு ஜீவனுக்கும் 'தர்ம பூதஞானம்" என்கிற குணமாகிய அறிவைக் கொடுத்திருப்பது.
3. ஒவ்வொரு ஜீவனையும் கைதூக்கிவிட சமயம் பார்த்திருப்பது. அதாவது, 'அன்று என் பேரைச் சொன்னாய், அன்று என் ஊரைச் சொன்னாய்' என்று நாம் எப்போதோ செய்த நல்ல கார்யங்களை நினைவில் கொண்டு அதற்கேற்ப நல்லது செய்ய முனையும் நிர்ஹேதுஹ க்ருபை, காரணமில்லா கருணை.(CAUSELESS COMPASSION)
4. ஜீவாத்மாக்கள் செய்யும் சிரிய அளவு புண்ணியத்திற்கும் மாபெரும் பலனான மோஷத்தைக் கொடுப்பது.

இதில் 'தர்ம பூத ஞானம் என்பது ஆத்மாவின் அறிவைக் குறிக்கும். இந்த தர்ம பூத ஞானம் என்பது எல்லா ஜீவாத்மாக்களுக்கும் உள்ளதுதான். ஆனால் பூர்வ ஜன்ம கர்ம வினையினால் இது மூடப்பட்டு, ப்ரகாசிக்காமல் இருக்கின்றது. நித்ய முக்தர்களுக்கும், நித்யசூரிகளுக்கும், எம்பெருமானுக்கும் எப்போதும் விரிந்து ப்ரகாச நிலையிலேயே இருக்கும். அனாதிகாலமாக நாம் செய்த கர்மவினைகளால் நமது தர்மபூதஞானம் ப்ரகாசமற்று இருக்கும். உதாரணமாக, ஒரு குழல் விளக்கில் அழுக்கு படிந்திருந்தால், அதை துடைத்ததும் விளக்கு ப்ரகாசமாய் எரிகிறது. அதில் ப்ரகாசம் ஏற்கனவே இருந்துள்ளது. நாம் செய்ததெல்லாம், அழுக்கை துடைத்ததே. அதுபோல, அனாதிகாலமாக, நாம் செய்த கர்ம வினைகள் நமது தர்மபூதஞானத்தை மூடியுள்ளது. பல பிறவிகளுக்குப் பின், எம்பெருமானின் நிர்ஹேதுக க்ருபையாலே, சத்வ குணம் அதிகரிக்க, அதிகரிக்க, ரஜோ, தமோ குணங்கள் மறைந்து, தர்மபூதஞானம் ப்ரகாசிக்கின்றது. ஒரு இருட்டறையில் இருக்கும் பொருளை விளக்கானது காண்பிப்பதுபோல், நமக்கு சரியான, தர்மமான பாதையைக் காண்பித்து, மோஷப் பாதையில் செலுத்துகிறது.

26. படித்து அடக்கமுள்ள பிராம்மணனிடமும், படிப்பில்லாத பிராம்மணனிடமும், உருவத்தில் சிறிய

பசுவிடமும், உருவத்தில் பெரிய யானையிடமும், நாயினிடமும், அதைத்தின்னும் சண்டாளனிடமும் உள்ள ஆத்மாக்கள் எல்லாம் ஒன்றேதான் என்கிற உண்மையான ஆத்ம ஞானம் பெற்றவர்கள் எல்லாவற்றையும் சமமாகவே பார்ப்பர் என்று கீதையில் பகவான் கூறுகின்றான்.

27. நமது சம்ப்ரதாயம் விசிஷ்டாத்வைதம், அல்லது இராமானுஜ சம்ப்ரதாயம் அல்லது சாரீரக சாஸ்த்திரம் என்பதைப் பார்த்தோம். இந்த சம்ப்ரதாயத்தில், பிராட்டியை முன்னிட்டுக்கொண்டே, எம்பெருமானைப் பற்ற வேண்டும். ப்ரம்மச்சாரி நாராயணனால் நமக்கு ஏதும் ப்ரயொஜனமில்லை என்று பிள்ளை லோகாச்சாரியார் கூறுகிறார். பிராட்டியின் பரத்வத்தை ஆளவந்தார், சதுஸ்லோகியில் முதல் இரண்டு பாசுரங்களில் கூறி மற்றும் இரண்டு பாசுரங்களில் உபாயம், உபேயம் பற்றி கூறியுள்ளார். பிராட்டி புருஷகார பூதை. நாம் செய்த நல்ல செயல்களை ஒன்றுக்குப் பத்தாக கூறியும், நாம் செய்த பாவங்களை குறைத்துச் சொல்லியும், எம்பெருமானிடம் நம்மைச் சேர்த்து வைப்பது பிராட்டியின் புருஷகாரம். அழகாலே எம்பெருமானையும், அருளாலே சேதனனையும் திருத்துபவள் பிராட்டி. அவள் அருகில் இருந்ததால் காகம் உயிர்ப்பெற்றது. அவள் அருகில் இல்லாததால் இராவணன் தலைகள் பறிக்கப்பட்டதென்பர் பூர்வர்

28. சஞ்சித கர்மா என்பது நாம் அனேக பிறவிகளில், நல்லதும் தீயதும் செய்து, புண்ணிய பாபங்களை சேர்த்து வைத்துள்ளோம். அவை ஒன்றன் பின் ஒன்றாக நமக்கு பலனை கொடுத்து வருகிறது. ஏதோ ஒரு பிறவியில் செய்த கர்ம பயனை, இப்பிறவியில் அனுபவித்து வருகிறோம். பயனளித்து வரும் இதுதான் ப்ராரப்த கர்மா. மோஷத்தை விரும்பி பகவத் பக்தி செய்பவனுக்கு சஞ்சித கர்மாக்கள் எல்லாம் போய்விடுகிறது. தற்போது அவன் அனுபவித்து வரும் ப்ராரப்த கர்மா முழுமையும் அவன் அனுபவித்து தீர்ந்த பிறகுதான் அவனுக்கு மோஷம். இதற்கு பலப்பல ஜன்மங்கள் ஆகலாம். ஆனால் எம்பெருமானது அவதார ரஹஸ்ய உண்மையை அறிந்துகொண்டு சரணாகதி செய்பவர்களுக்கு சஞ்சித கர்மா, ப்ராரப்த கர்மா இரண்டும் தொலையப்பெற்று இப்பறவியின் முடிவிலேயே மோஷம் கிட்டுகிறது என்கிறான் கண்ணன். இதைத்தான் "போயபிழைகளும் புகுதருவான் உள்ளனவும் தீயினில் தூசாகும்' என்று கூறுகிறாள் கோதை

29. பகவத் ராமானுஜர் ஒரு பங்குனி உத்திரத் திரு நன்னாளில், ஸ்ரீரங்கத்தில், பிராட்டியும், எம்பெருமானும் சேர்ந்த சேர்த்தியில் சரணாகதி அனுசந்தித்தார். பிராட்டி 'தயைவ சர்வம் சம்பத்யதே'என்று அருளினாள். பெரிய பெருமாளும்

அவருக்கு அருள் சுரந்து, "உமது சடலம் விழும் வரையில், ஸ்ரீரங்கத்திலிருந்து கொண்டு "த்வயம்" அனுசந்தானம் பண்ணிக்கொண்டிரும் என்று அருளினார். மேலும், நீர் செய்த இந்த சரணாகதி, உமக்கு மட்டும் அல்லாமல், உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் கிட்டும், என்று அருளிச் செய்தார்.

ஒரு சிம்மமானது மலைக்கு மலை தாவும்போது, சிறுசிறு பூச்சிகள், எவ்விதப் ப்ரயத்தனமுமின்றி சிம்மத்தின் மீது அமர்ந்து தானும் தாவுவதுபோல், எம்பெருமானாருடைய திருவடிகளை தஞ்சமடைந்த நாம், அவரால் செய்யப்பட்ட சரணாகதியால், சுலபமாக, கிடைத்தற்கரிய மோஷத்தை அடைவோம்.



எம்பெருமானார் ஒன்பது க்ரந்தங்கள் அருளிச் செய்துள்ளார். அவை அனைத்தும் ஸ்ம்ஸ்கிருத மொழியில் அமைந்தது. ஸ்ரீபாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தசாரம் ஆகியவை ப்ரம்ஹ சூத்திரத்திற்கு விளக்கமாகவும், கீதா பாஷ்யம், ஸ்ரீமத் பகவத்கீதைக்கு விளக்கமாகவும், உபனிஷத்துக்களின் பொருளை ஆராய்வது வேதார்த்த சங்க்ரஹமும் ஆகும். திருவாராதன க்ரமத்தை விவரிப்பது நித்ய க்ரந்தம். எம்பெருமானார் தம் திருவடி சம்பந்தம் பெற்றவர்கள் உய்வு பெறுவதற்காக பெரிய பெருமாள் பிராட்டியுடன் சேர்த்தியில் எழுந்தருளியிருக்கையில் அருளிச் செய்தது, சரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம் மற்றும் ஸ்ரீவைகுண்ட கத்யம் எனும் மூன்று கத்யங்கள் ஆகும். ஆக மொத்தம் ஒன்பது க்ரந்தங்கள்.

30. ஒரு ஜீவன் படைக்கப்படும்போது மூல ப்ருக்ருதியில் ரஜ, தம, சத்வமாகிய மூன்று குணங்களும் சமனிலையிலேயே உள்ளது. பிறந்தவுடன் ப்ருக்ருதி சம்பந்தத்தால் ஒரு ஜீவன் இந்த மூன்று குணங்களின் சேர்க்கையால் அந்த குண விசேஷணத்தால் கர்ம வினைகள் வந்து சேர்கின்றன ஒருவன் பிறக்கின்றவேளை அவனது குணத்தை நிர்ணயம் செய்கிறது. அவன் பிறக்கின்ற வேளையை அவன் செய்த பூர்வ வினை நிர்ணயம் செய்கிறது. நாம் தற்போது அனுபவிக்கும்

கஷ்டங்கள் என்பது நாம் ஜன்மாந்திரத்திலே பண்ணிய பாப விசேஷத்தினால் சம்பவிக்கிறது. அப்படி நினைக்காமல் தெய்வத்தினாலே அது ஏற்படுகிறது என்று நினைப்பது தவறு.

எம்பெருமான் நமது காரியங்களுக்கு சாட்சியாக மட்டும் நிற்கிறான். நாம் பண்ணுகிற கர்மாவிலே பரமாத்மாவுக்கு எந்த சம்பந்தமும் கிடையாது. வடிகட்டின வேதாந்த விஷயம் இது. இந்த வேதாந்த விஷயத்தை மனதில் கொள்ள வேண்டும். அவனை நினைப்பதால், கஷ்டத்தின் வேகத்தைக் குறைக்கிறான். அதாவது, "வேலைக்கோண்டு குத்துமிடத்தில், முள்ளைக்கோண்டு குத்துவதுபோலே," நமது கஷ்டத்தின் வேகம் குறைகிறது.

**31. ஸ்ரீ பாஷ்யக்காரர் கூறுவது:** ஒரு குழியில் அவரை விதையும், மறு குழியில் துவரை விதையையும் விதைக்கிறோம், தண்ணீர் ஊற்றுகிறோம். அவரை விதை அவரைச்செடியாகவும், துவரை விதை துவரையாகவும் வளர்கிறது. தண்ணீர் ஊற்றும் சம்பந்தம் வரையில் நாம் கர்த்தா. அவை அவரையாகவும், துவரையாகவும் வளர்வதற்கு நாம் காரணமில்லை. அதுபோல, ஜீவனுக்கு ப்ரக்ருதி சம்பந்தம் உண்டு பண்ணும் வரையில் பகவான் கர்த்தா. ஆனால் தேவனாகவும், மிருகமாகவும்,

பணக்காரனாகவும்,ஏழையாகவும்,சுகம் அனுபவிப்பவனாகவும், துக்கம் உடையவனாக இருப்பதற்கும் அவரவர் பூர்வ ஜன்ம கர்ம பலன் களே காரணம். ஆனால் நாம் என்ன நினைக்கிறோமென்றால், சுகம் வந்தால், நமது சாமர்த்தியத்தினால் வந்ததென்றும், துக்கம் வந்தால் பகவானால் வந்ததென்றும் நினைக்கின்றோம். விவேகிகள், சுகம் துக்கம் எது வந்தாலும் நம் கர்ம பலன் என நினைத்து சாந்தமாயிருப்பர்.

32. ஒரு குழந்தை பிறக்கிறபோது கூட ஐந்து விஷயங்கள் பிறக்கின்றன.

1. ஆயுள் : எவ்வளவு வயது வரை வாழும்.
2. கர்மா : இன்ன தொழில் செய்து பிழைப்பான்.
3. வித்தம் : இவ்வளவு பொருள் சம்பாதிப்பான்.
4. வித்யா : இவ்வளவு கல்வி வாய்க்கும்.
5. நிதனம் : இன்றைய தினம், இந்த ஷணத்தில் ப்ராணன் போகும். ". இதைத்தவிர, இதை மீறி, நாமாக ஒன்றையும் விருத்தி பண்ணமுடியாது.

33. **"ஜிதந்தே புண்டரீகாஷாய: நமஸ்தே விஸ்வபாவன: நமஸ்தே அஸ்து ஹ்ருஷீகேசய: மஹாபுருஷ: பூர்வஜ:"** இந்த ஸ்தோத்ரம் "வெற்றி உனக்கு" என்று ஆரம்பித்து எம்பெருமானுடைய ஸ்மஸ்த கல்யாண குணங்களை எளிய நடையில் கூறுகிறது. அடைய வேண்டிய எம்பெருமான்

மற்றும் அடைய வேண்டிய வழி ஆகிய இரண்டையும் கூறுவதால் இந்த மந்திரத்தை 'த்வய மந்திரத்திற்கு சமானம் என்று கூறுவர். இந்த ஒரு ஸ்லோகமே நித்ய ஆராதனத்தின்போது சேவிக்கலாம் என்று பெரியோர் கூறுவர்.

## ஆழ்வார்களும் ஆசார்யர்களும்

***The Alwars have revealed without any shadow of doubt, the central philosophy of Avatara, viz. that the one and only sureme being, the ultimate Reality of Meta physics assumes different names for making himself easily accessible to the devotees.***



**34.** எம்பெருமான் ஸ்ரீமன் நாராயணனால் மயர்வற மதி நலம் அருளப்பட்டு, அஞ்ஞானம்

நீங்கப்பெற்றவர்கள் ஆழ்வார்கள். வேதத்தாலும் அளவிட்டு அறிய முடியாத எம்பெருமானுடைய எல்லாக் குணங்களையும் அவனருளால் அறிந்து அனுபவித்தவர்கள். ஆழ்ந்து அறியும் ஞானத்தைக் கருவியாக கொண்டவர்கள் ஆதலால் ஆழ்வார்கள் எனப்பட்டனர். இவர்ளை **திவ்ய சூரிகள்** என்றும், இவர்கள் இயற்றிய பாசுரங்களை **திவ்யப் ப்ரபந்தங்கள்** என்றும், அந்த திவ்ய ப்ரபந்தங்கள் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலங்களை **திவ்ய தேசம்** என்று கூறுவர். இது மூன்றும் சேர்த்து **திவ்யத்ரயம்** எனப்படும். ஆழ்வார்கள் பன்னிருவர். அவர்களில் நம்மாழ்வார் மற்றைய ஆழ்வார்களுள் தலை சிறந்தவராக கொள்ளப் படுகிறார். இவர்கள் இயற்றிய 4000 பாசுரங்களை அருளிச் செயல்கள் என்று அழகிய தமிழில் கூறுவர். இத்தகைய ஆழ்வார்கள் எம்பெருமானின் அணிகலங்கள் மற்றும் ஆயுதங்களின் அம்சமாகத் தோன்றியவர்கள். நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி முறையே ருக்வேதம், யஜுர்வேதம், அதர்வண வேதம் மற்றும் சாமவேத்தின் சாரம் என்று பூர்வாசார்யர்கள் பணிப்பர்.

35. **ஆளவந்தார்** பரமபதித்தபோது, அவருடைய சிஷ்யர்கள் இனி நாங்கள் உய்வதற்க்கு வழி ஏது

என்று வினவ, ஆளவந்தார், "அமலாதிபிரான்" அருளிய திருப்பானாழ்வார் திருவடிகளையே சரணம் என்று பற்றியிருங்கோள் என்று அருளினார். ஆழ்வார்களில் திருப்பானாழ்வாருக்கு அவ்வளவு ஏற்றம். ஆழ்வார் பாசுரங்களில், பொதுவாக, 11 வது பாசுரம் பலஸ்ருதி, பலத்தைக்கொடுக்கும் நாமப்பட்டு என்பர். ஆனால் அமலாதிபிரானில், பலஸ்ருதி கிடையாது. அந்த பத்து பாசுரங்களுமே பலத்தைக்கொடுக்கும்.



ஆளவந்தார்
ஆடி - உத்திராடம்

இதில், முதல் மூன்று பாசுரங்கள், அ, உ, ம என்ற மூன்றெழுத்தைக் கொண்டு கொண்டு ஆரம்பிக்கும். அ என்பது அகாரவாசியான எம்பெருமானையும் உ என்பது பிராட்டியையும் ம என்பது ஜீவன் அல்லது சேதனன் அல்லது ஆத்மாவைக் குறிக்கும். அவை மூன்றையும் சேர்த்து படிக்கும்போது, ஓம் என்ற ப்ரணவ மந்திரமான அஷ்டாஷரம் விளங்கும். மற்ற ஐந்து, ஆறு மற்றும் ஏழாவது பாசுரங்கள் பா, து, கை என்று ஆரம்பிக்கும். இது சரணாகதியைக் குறிக்கும்.

36. ஸ்ரீவைஷ்ணவ ஸ்ம்ப்ரதாயத்தில் பகவானது அனுக்ரஹத்தைப் பெறுவதற்குரிய வழிகள் ஐந்தாகக்

கூறப்பட்டுள்ளன. அவை, கர்ம யோகம், ஞான யோகம், பக்தி யோகம், ப்ரபத்தி மற்றும் ஆசார்ய அபிமானமாகும். இவற்றில் ப்ரதானமானதும், சுலபமானதும் ஆசார்ய அபிமானமேயாகும். வேதம், இதிஹாசம், புராணங்கள் எல்லாமே இவ்வாத்மா கடைத்தேறுவதற்குரிய ப்ராதான காரணமாக ஆசார்ய அபிமானத்தையே வலியுறித்திக் கூறுகின்றன. 'ஆசார்ய அபிமானமே உத்தாரகம் என்றும் அவன் இல்லையெனில் மோஷம் பெற இயலாது என்றும் கூறப்பட்டுள்ளது.

ரத்தினத்தின் விலை உயர, உயர, அந்த ரத்தினத்தைக் காட்டிக்கொடுத்தவன் மேல் மதிப்பு உயருவதுபோல், எம்பெருமானைக் காட்டிக் கொடுத்த ஆசார்யன் பால் மதிப்பு உயரும். சாஷாத் நாராயணனே ஆசார்யனாகிய உடலை எடுத்து வந்ததாக ஜயாக்ய சம்ஹிதை சொல்கிறது. வழிப்பறி, கொலை, கொள்ளை போன்ற பெரும் பாவச்செயல்களை செய்து வந்த ஷத்ரபந்து என்பவன் ஆசார்ய கடாஷத்தால் மோஷம் அடைந்தான். 'பக்தியில் அசக்தனுக்கு ப்ரபத்தி. ப்ரபத்தியில் அசக்தனுக்கு ஆசார்ய அபிமானம்' என்பர் பூர்வர். அதாவது, பக்தியோகம் செய்ய இயலாதவனுக்கு ப்ரபத்தியும், ப்ரபத்தியும் செய்ய இயலாதவனுக்கு ஆசார்ய அபிமானமும் மோஷத்தைத் தரும் என்பதாகும்.

நமது பூர்வாசார்யர்களின் ஆசார்ய அபிமானத்தை ஒரு ஐதீகத்தின் மூலமாக அறிந்து கொள்ளலாம். ஒருமுறை நஞ்சீயரின் ஆசார்யரான பராசர பட்டர் கூரகுலோத்துமன் என்ற ஊரில் எழுந்தருளியபோது, அங்கு நஞ்சீயர் அமைத்திருந்த நந்தவனத்தில், பட்டருடைய வரவால் இடையூறு ஏற்பட்டது என்று அங்கிருந்த ஏகாங்கிகள் சிலர் கூறினர். இதைக்கேட்ட நஞ்சீயர், "நம்பெருமாளுடைய திருக்குழற்கற்றை சிக்கு நாறுகின்றதென்றா, நான் நந்தவனம் அமைத்திருக்கிறேன்? அடியேனுடைய ஆசார்யரான பட்டருக்கும் அவரது குடும்பத்தினருக்கும் விருப்பப்படி நந்தவனம் பயன்பட வேண்டும் என்பதுதான் என் நோக்கம். அதற்கேற்ப நடந்து கொள்ளுங்கள்" என்று கடிந்து கொண்டார்.

**இனி வைஷ்ணவ சித்தாந்தத்தை வளரச் செய்த சில பூர்வாச்சார்யர்களையும் அவர்கள் வைஷ்ணவத்துக்கு இயற்றிய சில நூல்களைப் பற்றியும் பார்ப்போம்.**

**37.** சாமவேத சாரம் என்று போற்றப்படும், நம்மாழ்வார் அருளிச்செய்த 'திருவாய்மொழி' 1102 பாசுரங்கள் கொண்டது. இதற்கு ஐந்து ஆசார்யர்கள் ஐந்து வ்யாக்யானங்கள், அழகிய மணிப்ரவாள மொழியில் அருளிச்செய்துள்ளார்கள். மணிப்ரவாளம்

என்பது தமிழும், வடமொழியும் கலந்து அந்த காலத்தில் பழக்கத்தில் வழங்கிய மொழியாகும். அப்படிப்பட்ட வ்யாக்யானங்கள் அவதரிக்காமல் இருந்திருந்தால், அந்த த்வ்யப்ப்ரபந்தங்களின் பொருளை நாம் நன்றாக அறிந்து கொண்டிருக்க முடியாது.



நஞ்ஜீயர்
பங்குனி - உத்திரம்



பெரியவாச்சான்பிள்ளை
ஆவணி - ரோஹிணீ



நம்பிள்ளை
(கார்த்திகையில் - கார்த்திகை)

முதலில், **திருக்குருகைப்பிள்ளான் பிரான்** எனும் எம்பெருமானாருடைய சிஷ்யர், உடையவரது பரம க்ருபையாலே 'ஆறாயிரப்படி' எனும் வ்யாக்யானம் அருளிச்செய்தார். முப்பத்திரண்டு எழுத்துக்கள் கொண்ட ஒரு தொகுதி 'க்ரந்தம்' அல்லது 'படி' எனப்படும்.

இரண்டாவதாக, **நஞ்சீயர்** எனும் ஆசார்யர் ஒன்பதினாயிரப்படி வ்யாக்யானம் அருளிச்செய்தார்.

மூன்றாவதாக, **பெரியவாச்சான்பிள்ளை** எனும் ஆசார்யர் அருளிச்செய்த வ்யாக்யானம் இருபத்து நாலாயிரப்படியாகும்.

பின்பு, **நம்பிள்ளை** எனும் ஆசார்யர் தெளிவாக அருளிச்செய்த திருவாக்குகளை உட்கொண்டு,



வடக்குத் திருவீதிப்பிள்ளை
ஆனி – ஸ்வாதி



அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்
மார்கழி – அவிட்டம்



திருவரங்கப்பெருமாள் அரையர்
வைகாசி – கேட்டை

**வடக்கு திருவீதிப்பிள்ளை** எனும் ஆசார்யர் அருளிச்செய்த வ்யாக்யை 'ஈடு முப்பத்தாறாயிரப்படி' என்பதாகும்.

ஐந்தாவதாக, வாதிகேசரி **அழகிய மணவாளச் சீயர்** என்பவர் தனது மிக்க ஞானத்தால் 'பன்னீராயிரப்படி' எனும் வ்யாக்யானம் அருளிச்செய்தார். இவர்களில் பெரியவாச்சான்பிள்ளை எனும் ஆசார்யர், திருவாய்மொழி மற்றுமன்றி, நாலாயிரத் திவ்யப்ப்ரபந்தங்களுக்கும் வ்யாக்யானம் அருளிச்செய்துள்ள பரமர். அவரது பரம க்ருபை இல்லாவிடில், நாலாயிர திவ்யப்ப்ரந்தங்களின் அரிய பொருளை நாம் அறிந்திருக்க முடியாது.

இதுபற்றியே, 'உபதேசரத்ன மாலையில்' மணவாள மாமுனிகள் பெரியவாச்சான் பிள்ளையை வியந்து பேசுகிறார்.

38. நாதமுனிகளின் பேரனும் யமுனாச்சார் என்று அழைக்கப்படும் ஸ்ரீ ஆளவந்தார், நமது சம்ப்ரதாயத்தின் ப்ராதன ப்ரவர்த்தகர். இவர் சதுஸ்லோகி, என்னும் பிராட்டி வைபவமும், பெரிய பெருமாளின் வைபவம் கூறும் ஸ்தோத்ர ரத்னம் ஆகிய நூலையும் ஆகமப் ப்ரமாணம் என்ற நூலையும் மேலும் சில அரிய நூல்களையும் இயற்றியுள்ளார். ஸ்ரீ ராமானுஜரை, நமது ஸ்ம்ப்ரதாயத்திற்கு ப்ராதன ப்ரவர்த்தகராகக் கொண்டுவர பெரு முயற்சி எடுத்தவர். அவரை தூரத்தில் கண்ட உடனேயே, **“ஆம் முதல்வன் இவன்"** என்று கண்டுகொண்டு, காஞ்சி வரதப் பெருமாளிடம் வேண்டி, அவருக்கு பின்பு தலைமை ஏற்கச் செய்தவர்.



எம்பெருமானார்
சித்திரை - திருவாதிரை

ஆளவந்தார் பரமபதித்தபோது, அவருடைய சிஷ்யர்கள் இன நாங்கள் உய்வதற்க்கு வழி ஏது என்று வினவ, ஆளவந்தார்,"சமயம் கிடைக்கும் போதெல்லாம் திருவரங்கன், திருமலை வேங்கடேசப் பெருமாள், காஞ்சி வரதராஜப்

பெருமாள் ஆகியோரை தரிசனம் செய்யுங்கள். ஸ்ரீரங்கம் என்பது ஸ்ரீமன் நாராயணனது இருப்பிடம். திருமலையை பெருமானுடைய திருவடிகளில் நம்மைக் கொண்டு சேர்க்கும் சரம ஸ்லோகமாக கருதுதல் வேண்டும். காஞ்சிபுரத்தில் உறையும் அருளாளப் பெருமாளை சேதனர்களுக்கு முக்தியளிக்கும் த்வய மந்திரமாகக் கருதுதல் வேண்டும் என்று ரஹஸ்யார்த்தங்களை ஆளவந்தார் தமது அந்திம காலத்தில் சிஷ்யர்களுக்கு அருளிச் செய்தார் என்பர்.

39. எம்பெருமான் விஷயத்தையும் தலைக்கட்டிவிடலாம் எம்பெருமானார் விஷயத்தையும் தலைக்கட்டிவிடலாம். ஆனால் கூரத்தாழ்வான் விஷயத்தை மட்டும் ஆதிசேஷனாலும் தலைக்கட்ட முடியாது என்பர் பூர்வர். செல்வசெருக்கு, கல்விச்செருக்கு, குலச்செருக்கு என்ற முக்குறும்பையும் அறுத்தவர் இவர். பகவத் ராமானுஜரின் முக்ய சீடர். அவரது வலது கையாக திகழ்ந்தவர். நம் வைஷ்ணவ தர்சனத்திற்காக, தனது தர்சனத்தையே கொடுத்தவர். இராமானுஜர் இவரை தண்டுமாகவும்,


கூரத்தாழ்வான்
தை - ஹஸ்தம்

முதலியாண்டானை பவித்ரமாகவும் பாவிப்பர். கூரத்தாழ்வான் பஞ்சஸ்தவங்கள் எனும் எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை விளக்கும் ஐந்து ஸ்தோத்ரங்களை அருளிச்செய்துள்ளார். அவை ஸ்ரீவைகுண்டஸ்தவம், அதிமானுஷஸ்தவம், சுந்தரபாஹுஸ்தவம், வரதராஜஸ்தவம் மற்றும் ஸ்ரீஸ்தவம் ஆகும். .கூரத்தாழ்வான் சரண் கூடியபின் நமக்கேதும் சிதைவில்லை.

**40.** யக்ஜமூர்த்தி என்பவர் ஒரு அத்வைதி. அவருடன் இராமனுஜர் 17 நாட்கள் தொடர்ந்து தர்கித்து, பேரருளாளன் திருவருளால் வெற்றி கொண்டார். அவரை திருத்திப் பணி கொண்டு, அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்று பெயரிட்டு நமது சம்ப்ரதாயத்தில் ஈடுபட வைத்தார். அவரும் உடையவரிடம் அடிபணிந்து, ஞானசாரம், ப்ரமேய சாரம் என்ற இரண்டு நூல்களை இயற்றினார். இதில் சொல்லப்பட்ட கருத்துக்கள், வேதங்களிலும், புராணங்களிலும், சாஸ்திரங்களிலும் மற்றும் ஆசார்யர்களின் வாக்குகளிலுமிருந்தும் தொகுக்கப் பட்டவேயாகும்.


அருளாளப் பெருமாள் எம்பெருமானார்
கார்த்திகை - பரணி

இவை எம்பெருமானைக் குறித்து இயற்றப்பட்ட முதல் தமிழ் நூல்கள் என்று கருதப் படுகிறது.

41. கூரத்தாழ்வானுடைய திருக்குமாரர் பராசர பட்டர் என்பவர் ஆவார். இவர் பெரிய பெருமாள், பெரியபிராட்டிக்கு ஸ்வீகார புத்ரனாகவே வளர்ந்தார். எம்பெருமானாரின் விருப்பப்படி, வேதாந்தி எனும் அத்வைதியை வாதத்தில் வெற்றி கொண்டு நஞ்சீயர் என்று திரு நாமம் சாத்தி நம் தர்சனத்தில் ஈடுபடவைத்தார். இவர் அருளிச்செய்த அஷ்டஸ்லோகி என்கிற க்ரந்தமே ரஹஸ்யத்ரய விவரணமான க்ரந்தங்களுள் முதன்மை பெற்று விளங்குகிறது. இதில் முதல் நான்கு ஸ்லோகங்களினால் திருமந்திரத்தின் அர்த்தமும், அடுத்த இரண்டு ஸ்லோகங்களினால் த்வயத்தின் அர்த்தமும் கடைசி இரண்டு ஸ்லோகங்களினால் சரமஸ்லோகப் பொருள் தெரிவிக்கப்படுகிறது. மேலும், த்வயத்தின் பொருளை விளக்கும் ஸ்ரீரங்கராஜஸ்தவம் எனும் நூலையும் ஸ்ரீகுணரத்னகோசம் ஆகிய நூலையும் இயற்றியுள்ளார்.

42. ஸ்ரீ வசன பூஷணம் என்ற நூலை எழுதியவர் பிள்ளைலோகாச்சார்யர். இவர் காஞ்சி தேவப்பெருமாளின் அம்சம் என்று கூறுவர். நம்பிள்ளையின் சீடரான, வடக்கு திருவீதிப்பிள்ளை அவர்களின் குமாரர். இவரது சகோதரர் ஆசார்ய ஹ்ருதயம் என்ற நூலை அருளிச்செய்த அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். பிள்ளைலோகாச்சார்யர், ஓராண்வழியாக வந்த பூர்வாச்சார்யர்களில் 18வது ஆவர். இவர் 18 ரஹஸ்யக் க்ரந்தங்கள் அருளிச்செய்துள்ளார். தத்வத்ரயம், முமூக்ஷுப்படி, ஸ்ரீவசனபூஷணம், யாத்ருச்சிக்கபடி, அர்த்த பஞ்சகம், அர்ச்சிராதி, ப்ரமேயசேகரம் ஆகியவை இதில் முக்யமானவை. அதிலும் முக்யமானது ஸ்ரீவசனபூஷணம். 466 சூர்ணிகளைக் கொண்ட ஸ்ரீவசனபூஷணம், சிறையிருந்தவள் ஏற்றம் என்று சீதா பிராட்டியின் மேன்மையையும், தூது சென்றவன் ஏற்றம் என்று பாண்டவர்களுக்காக தூது சென்ற பகவான் க்ருஷ்ணனின் மேன்மையையும் சிறப்பாகக் கூறுகிறது.



பிள்ளைலோகாசார்யர்
ஐப்பசி - திருவோணம்

ஸ்ரீரங்கத்தில் அன்னியர் படையெடுப்பு நடந்தபோது, பிள்ளைலோகாச்சார்யர், திருவரங்கம் உற்ச்சவ

மூர்த்தியான நம்பெருமாளை மறைவானதொரு இடத்துக்கு எடுத்துச் சென்று பாதுகாத்ததாக சொல்லப்படுகிறது. காடு, மலை, கள்வர்கள் பயம் போன்ற துன்பங்களைக் கடந்து செல்லும்போது, ஜோதிஷ்குடி எனும் இடத்தில் பரமபதித்தார்.

43. ஆசார்யஹ்ருதயம் என்ற நூலை இயற்றியவர் வடக்குதிருவீதிப் பிள்ளையின் இளைய குமாரரும், பிள்ளைலோகாசார்யரின் திருத் தம்பியுமான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்பவர். 234 சூர்ணிகளைக் கொண்ட 'ஆசார்யஹ்ருதயம்' இவரது முதுபெரும் புலமைக்குச் சான்றாக உள்ளது. இதில் எம்பெருமான், மனித குலம் உய்வதற்கு வேத இதிஹாச புராணங்களை அருளியமை, சாஸ்திரங்கள் மூலமாகவும், தன் முயற்சியால் மட்டுமே பகவானை அடையமுயலும் முனிவர்களுக்கும், ரிஷிகளுக்கும், எம்பெருமானின் அருளால் த்வ்ய ஞானக்கண்ணாலே பகவானைக் கண்ட ஆழ்வார்களுக்குமுள்ள வேறுபாடு, நம்மாழ் பெருமை, தமிழ் மொழியின் ஏற்றம், தமிழ் வேதமாகிய திருவாய்மொழியின் ஏற்றம், அர்த்த பஞ்சகத்தின் சிறப்பு, இராமாயணத்தைவிட திருவாய்மொழியின் மேன்மை ஆகியவை அழகாகவும் விரிவாகவும் கூறப்பட்டுள்ளது. இந்த் நூலின் கருத்து இவருடையதாக இருந்தாலும், அவர் பயன்படுத்திய சொற்கள், சொற்றொடர்கள்

அனைத்துமே, திருவாய்மொழி, மற்ற ஆழ்வார்களின் திருப்பாசுரங்கள், ஸ்ரீராமாயணம், ஸ்ரீ விஷ்ணு புராணம் முதலிய பழமையான நூல்களிருந்தே எடுக்கப்பட்டுள்ளன. இதன் ஆழ்பொருளை அறிந்துகொள்ள மணவாள மாமுனிகள் மணிப்ரவாள நடையில் அருளிச் செய்துள்ள பேருரை விரிவும் பொலிவும் மிக்கதாக உள்ளது.

**44.** சப்த காதை என்ற நூலை இயற்றியவர் விளாஞ்சோலைப்பிள்ளை. இவர் பிள்ளை லோகாச்சர்யருடைய திருவடிகளை அடிபணிந்து எல்லா ரஹஸ்யங்களின் அர்த்தத்தை கேட்டு அறிந்தார். அவரது ஸ்ரீ வசனபூஷணத்தில் மிக ஊறியவராக, அதிலும் ஆசார்ய அபிமானத்தில் திளைத்தவர். "ஆசார்ய அபிமானமே உத்தாரகம்" என்பதை நினைத்து ஒரு ப்ரபந்தம் அமைத்தார். அதுவே சப்த காதை என்ற நூல். மதுரகவியும், வடுக நம்பியைப்போல், விளான்சோலைப்பிள்ளையும் ஆசார்ய அபிமானத்தில் திளைத்தவர்.

திருனந்தபுரத்திலிருந்த இவரை திருவாய்மொழிப்பிள்ளை ஆச்ரயித்து ரஹஸ்யார்த்தங்களை கற்றறிந்தார். விளான்சோலைப்பிள்ளை பரமபதித்தபோது, பெரிய நம்பிகள் மாற நம்பிக்கு செய்ததுபோல, திருவாய்மொழிப்பிள்ளை

விளாஞ்சோலைப்பிள்ளைக்கு சகல ஸ்ம்ஸ்காரங்களையும் செய்தார்.

சப்த காதையில் ஜீவன் - எம்பெருமானுக்குள்ள நவ சம்பந்தம் பற்றியும், சரீர-சரீரி பாவம் பற்றியும் சொல்லப்படுகிறது. ஆசார்ய சம்பந்த்தத்தின்முக்யத்தையும், பிராட்டி-பெருமானை ஆசார்யனின் கருணையோடும் அடையவேண்டும் என்று அருளிச்செய்துள்ளார். நமக்கு வாய்த்த ஆசார்யனிடம் பரிவும், மதிப்பும், மரியாதையும் வைக்காமல், என்னதான் மேன்மையான ஞானம் பெற்றிருந்தாலும், அந்த ஞானம் யானை செய்த ஸ்னானம் போல் வீணானது என்றும் அஞ்சு பொருள் அறிவித்த ஆசார்யன்பால் அன்பில்லாதவன் விஷத்தைவிட மிகக் கொடியவன் என்றும் கூறுகிறார். ஏனெனில், விஷம் உடலாகிய தேஹத்தை அழிக்கும். மற்றது நமது ஆத்ம ஸ்வரூபத்தையே அழித்துவிடும் என்றும் அருளிச் செய்துள்ளார்.

**45.** ப்ரபன்ன காயத்ரி என்னும் இராமானுஜ நூற்றந்தாதி ஸ்ரீரங்கத்தில் மூங்கில்குடி வம்சத்தில், பங்குனி ஹஸ்த திரு நாளில் தோன்றிய திருவரங்கத்தமுதனாரால் இயற்றப்பட்டது. பெரியகோயில் நம்பி என்று அழைக்கப்பட்ட இவர், பெரிய கோயிலில் புரோகிதப் பொறுப்பை வகித்து வந்தார். இவரை இராமானுஜரும், கூரத்தாழ்வானும்

திருத்திப் பணி கொண்டனர். இவர் உடையவர் விஷயமாக 108 பாசுரங்களைக் கொண்ட 'இராமானுஜ நூற்றந்தாதி என்ற அரிய நூலை இயற்றினார். பெரிய பெருமாளாலும், எம்பெருமானாராலும் செவிசாய்க்கப்பட்ட இந்த அந்தாதி, பெரிய பெருமாள் ஆக்ஜைக்கு இணங்க, நாலாயிர ப்ரபந்தத்தில் சேவிக்கப்படுகிறது. "கண்ணினுண் சிறுத்தாம்பு' நம்மாழ்வார் விஷயத்திற்கு ஆனாற்போல், இந்த இராமானுஜ நூற்றந்தாதி உடையவர் விஷயமாயிற்று. ஒவ்வொரு ப்ராம்மணனுக்கும் காயத்ரி மந்திரம் எவ்வளவு முக்யமானதோ, அதுபோல, ஒவ்வொரு ப்ரபன்னனுக்கும் இது முக்யமாதலால், இதற்கு ப்ரபன்ன காயத்ரி என்று பெயர் பெற்றது.

46. உபதேசரத்னமாலை எனும் நூல் ஆதிசேஷனின் அம்சமாக அவதரித்த, பொய்யில்லாத மாமுனிகள் என்று அழைக்கப்படும் மணவாள மாமுனிகள் அருளிச்செய்தது. அவரது சிஷ்யர்களின் வேண்டுகோளுக்கிணங்க, ஆழ்வார்களின் ஏற்றம், அருளிச்செயல்களின் ஏற்றம், பூர்வாச்சார்யர்கள், அவர்களது திரு நக்ஷத்ரம், அவதரித்த நாள், மற்றும் ஸ்தலம், அவர்களது அருளிச்செயல்கள் போன்ற அரிய விஷயங்களை பின்னோரும் கற்கும் விதமாக, மிக விரிவாக உபதேசரத்னமாலையில் மணவாள மாமுனிகள் கூறியுள்ளார். தினமும் ஒரு

வெண்பாவாக 73 செய்யுள்களில் உபதேசமாய் பேசியுள்ளார். ஸ்ரீவசனபூஷணத்தின் சிறப்பை விளக்கியுள்ளார். பெரிய ஜீயர் என்று வழங்கப்படும் மணவாள மாமுனிகள், யதிராஜ விம்சதி, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி ப்ரபந்தம், திருவாராதனக்ரமம் போன்ற நூல்களையும் மற்றும் அனேக வ்யாக்யானங்களையும் அருளிச்செய்துள்ளார். ஸ்ரீ ரங்க நாதரின் விருப்பதிற்கு இணங்க, திருவாய்மொழிப் பொருளை, ஈடு முப்பத்தாறாயிரமாக சாதித்து, 'ஸ்ரீசைலேச தயாபாத்ரம்' என்று எம்பெருமானாலேயே தனியன் சாதிக்கப் பெற்றார். தமது 73ம் வயதில் பரமபதம் எழுந்தருளினார்.



47. இராமானுஜ சம்ப்ரதாயத்தை வளர்த்தவர்களில் வேதாந்த தேசிகர் முக்யமானவர். அவர் காஞ்சிக்கு அருகிலுள்ள தூப்புல் எனும் அக்ரஹாரத்தில், திருமலை ஏழுமலையானின் திரு மணியின் அம்சமாக அவதரித்தவர். கருட மந்திரம் ஜபித்து, ஹயக்ரீவர் அருளால் நூற்றுக்கணக்கான நூல்கள் இயற்றினார். தேடி வந்த அரசவை பதிவியையும் ஒதுக்கித் தள்ளி, 'வைராக்ய பஞ்சகம்' என்ற நூலை இயற்றினார்.



மாயாவாதிகளை தர்க்கத்தில் வென்று, 'சத்தூஷணி' என்ற நூலை எழுதினார். பெரிய பெருமாள், இவர் அருளிய 'ஸ்ரீ பாஷ்ய ப்ரவசனத்தை செவி மடுத்து 'வேதாந்தச்சார்யர்' என்று அழைத்தார். ஸ்ரீ ரங்க நாச்சியார் ' சர்வ தந்த்ர ஸ்வதந்திரர்' என்ற விருதை அளித்தார். ரஹஸ்ய ரத்னாவளி, ரஹஸ்யத்ரய சாரம் போன்ற ரஹஸ்யக் க்ரந்தங்களும், வ்யாக்யானங்களும் அருளிச்செய்தார். இவருக்கு 'கவிதார்க்கிக சிம்ஹம்' என்ற விருதும் அளிக்கப்பட்டது. 'ஸ்ரீஸ்துதியை அருளிச்செய்து ஒரு ஏழை ப்ரம்மச்சாரியை செல்வந்தனாக்கினார். பல்வேறு அதிசயங்களை பேரருளாளன் துணை

கொண்டு நடத்தி வந்தார். 'பாதுகா சஹஸ்ரம் என்ற ஸ்ரீ ரங்கனாதன் திருவடிகள் விஷயமாக ஒரே இரவில் ஒராயிரம் ஸ்லோகங்கள் இயற்றினார். திருவேங்கடமுடையானின் 'தயா' எனும் கல்யாண குணத்தைப் போற்றி 'தயா சதகம்' எனும் நூலை அருளிச்செய்தார். வேதாந்த தேசிகர் இயற்றிய மகாவீர வைபவத்தை, ரகுவீரகத்யமென்றும், கருடனைப் புகழ்ந்து வரைந்த துதி நூலை 'கருட தண்டகம்' என்றும் பெயரிட்டுள்ளது. அந்த நூலில் ஒவ்வோரடியிலும் 108 எழுத்துக்கள் உள்ளது.

அன்னியர்கள் படையெடுப்பால் சிதறிய ஸ்ரீரங்கம் கோவிலில், சுதர்சன பட்டரது இரு குமாரர்களுடன் பிணக்குவியலில் படுத்திருந்து, இருட்டிய பிறகு அவர்களையும் ஸ்ருதப்ரகாசிகை என்னும் க்ரந்த்தத்தையும் எடுத்துக்கொண்டு, கர்னாடக தேசத்தில், சந்த்யாகாலம் எனும் இடத்தை அடைந்து, அபீதிஸ்த்வம் என்கிற நூலை இயற்றினார்.

"வாரணமாய் அவர்தம் வாதக்கலிகள் மாய்த்த பிரான்." ஒரு யானை எவ்விதம் ஒருவாழைத்தோட்டத்தில் புகுந்து வாழைத்தோட்டத்தை அழிப்பதுபோல, மாயவாதிகளை தமது வாதத் திறமையால் அழித்தவர் ராமனுஜர் என்று எம்பெருமானாரைப்பற்றி வேதாந்த தேசிகர் அருளியது.

48. அரையர் சேவையும் அத்யயன உத்சவமும்: திருமால் திருக்கோயில்களில் நடைபெறும் விழாக்களில் மிக்க சிறப்புடன் கொண்டாடப்படுவது, திரு அத்யயன உத்சவமாகும். இவ்விழா மார்கழி மாத சுக்லபட்ச ஏகாதசிக்கு முன்பாக பத்து தினங்களும் அதன் பின்பு பத்து தினங்களுமாக இருபது நாள் கொண்டாடப்படுவது. முந்தியது பகல்பத்து என்றும் திருமொழித் திரு நாள் என்றும் பிந்தியது இராப்பத்து என்றும் திருவாய்மொழித்திருநாள் என்றும் குறிப்பிடப்படும். ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்தக் கோவிலில் தீர்த்த மரியாதைகள் பெறும் ஆசார்யர்களின் தலைமையில், கோஷ்டியாக இருந்து, இருபது தினங்களிலும் நாலாயிரப் பாசுரங்கள் முழுவதையும் எம்பெருமான் திருமுன்பு சேவிப்பார்கள். பகல் பத்தில் முதலாயிரமும், திருமொழியும் சேவிப்பர். இராப்பத்தில் திருவாய்மொழியும், இயற்பாவும் சேவிப்பர். திருவரங்கத்தில் திருமங்கையாழ்வாரால் தொடங்கப்பட்ட இராப்பத்து, பின்பு நாதமுனிகளின் பெரு முயற்ச்சியால் நாலாயிர திவ்யப்ரபந்தங்களும் அடையப்பட்டு, இன்று அனேக வைஷ்ணவ கோவில்களிலும் சேவிக்கப் படுகிறது. இந்த திருவத்யயன உத்சவத்தில் 'அரையர்கள்' எனப்படுபவர்கள், ஆழ்வார் பாசுரங்களை இசையுடனும் அபி நயத்துடனும் விண்ணப்பித்தனர்.



அரையர்கள் என்ற பெயர் அரசர்கள் என்ற பதத்தில் தோன்றியது. எனவே க்ரீடம் போன்ற பட்டுக்குல்லாய் அணிந்து இந்த விண்ணப்பம் செய்பவர்களை அரையர்கள் என்று கூறுவர். இசைகாரர்கள் என்றும் கூறுவதுண்டு. இசையில் வல்லவர்களான அரையர்கள் நாட்டியத்துறையிலும், முத்திரைகள் விளக்குவதிலும், நடிப்பிலும் தேர்ந்தவர்கள். திருவரங்கன் முன்பு நின்று இசையாலும், அபினயத்தாலும் அவனது கல்யாண குணங்களை சிறப்பிப்பது இவர்களது பணியாகும். அவ்வாறு பாடும் போது, பாடற்பொருளில் ஆழ்ந்து, நெஞ்சுருகி, கண் பனிப்ப நின்று, மேற்கொண்டு தொடர முடியாமலிருப்பர். அத்தகைய சிலர், திருவரங்கத்துப் பெருமாள் அரையர். பிள்ளை நறையூர் அரையர் போன்றவர். நாதமுனிகள்,

ஆளவந்தார், இராமானுஜர் மற்றும் அவருடைய சீடரான எம்பாரும் அரையர் கலையில் சீர்ந்திருத்தங்கள் செய்து அந்த அரையர் கலையை வளர்த்தனர்.

நம்பிள்ளை உரை நூலாகிய ஈட்டில், திருவத்யயனம் பற்றிய செய்திகள் ஐதீகங்கள் வாயிலாகத் தொகுக்கமுடிகிறது. இதன் மூலம் அரையர்களின் அபினயத்திறன், ஆழ்ந்த புலமைத்திறன், சமூக உணர்வு ஆகியவை அறியப்படுகின்றது.

49. நாதமுனிகள் கூறியது: குளம்படியில் நீர் தேங்கினால் குருவி குடித்து போகும். வீராணத்து ஏரியில் நீர் தேங்கினால் நாடு செழிக்கும் .இதன் அர்த்தம், ஒரு மாட்டின் குளம்படியில் நீர் தேங்கினால் ஒரு சில குருவிகள் மட்டும் குடிக்க முடியும். அதே மழை நீர் வீராணத்து ஏரியில் நிறைந்தால் ஒரு நாடே செழிக்கும்.



ஸ்ரீமந்நாதமுனிகள்
ஆனி - அனுஷம்

அதுபோல ராமானுஜருக்கு முன்வரையிலுள்ள ஆச்சர்யர்களால் ஒருசில சிஷ்யர்களுக்கு மட்டும் பயன்பட்டு வந்தது. அதே

அர்த்தங்கள் ராமானுஜரிடம் வந்து சேரும்போது உலகனைத்திற்கும் பயன்படும். இதன் உட்கருத்தை அறிந்துகொண்ட ராமானுஜர், 'ஆசைப்பட்டோர்க்கெல்லாம் கூறுங்கள் ஆரியர்காள்' என்று ஓர் ஆண் வழி உபதேசத்தின் வரம்பை மீறி, 74 மதகுகள் கொண்ட வீராணம் ஏரியைபோல 74 சிம்மசனாதிபதிகளை தமது சீடர்களாக நியமித்தார்

## இனி ஸ்ரீவைஷ்ணவத்தில் தேறின விஷயங்களையும், சில ஐதீகங்களையும் பார்ப்போம்.

50. " அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டி நின்று உதவும்.". என்று முமுக்ஷுப்படியில் பிள்ளைலோகாசாரியார் கூறுகிறார்

அதாவது, எம்பெருமான் வெகுதூரத்திலிருந்தாலும், அவனது திரு நாமமே நம்மை தக்க சமயத்தில் வந்து ரக்ஷிக்கும். த்ரொளபதியை காத்தது போலே. "அணிந்து அழகு பார்க்க முடியாத கட்டிப்பொன் போன்ற உம்மைப்போல் அல்லாமல் அணிந்து அழகு பார்க்கக்கூடிய ஆபரணப்பொன் போன்றது உம்முடைய திரு நாமம்" என்பர் பூர்வர். கலியுகத்தில் நாம சங்கீர்த்தனமே மேலானதாக கொள்ளப் படுகிறது.

51. முத்துக்குளிப்பவர்கள் விலை உயர்ந்த முத்தைக் கொடுத்து, விலை குறைந்த வெண்ணெ, பழம் முதலானவற்றை பெற்றுக்கொள்வார்கள். எம்பெருமானின் திரு நாமத்தைக் கொண்டு அற்பமான, அழியக்கூடிய, பலன் களைப் பெற முயல்பவர்கள் இத்தகையவர். அதே முத்தை அதன் மதிப்பறிந்த வணிகர், அதை நல்ல விலைக்கு விற்பர். அது போலே, எம்பெருமானின் திரு நாமத்தின் மேன்மையை உணர்ந்தவர்கள் அற்பப் பலன் களைப் பெற விரும்பாமல், மோஷத்தையே விரும்புவர்.

52. நாராயணனே எல்லாவிதமான பந்து. இருளைப் போக்கும் அருட்கடல். தனது சங்கல்பத்தினால் அனைத்து உலகையும் உலகிலுள்ள பொருள்களையும் தரிக்கிறான். பிராட்டியின் யோகத்தினால் அதிகமாக இரக்கம் காட்டுகிறான். வேறு உபாயம் இல்லை என்ற எண்ணத்துடன் அடைபவர்களுக்கு தானே உபாயமாக நிற்கிறான். எவனை நான்



வரிக்கிறேனோ அவன் தான் என்னை அடைய முடியும் என்று அவன் சொன்னான். அவன் நம்மை வரிப்பதற்கு காரணமாக அமைந்ததே பக்தி அல்லது ப்ரபத்தி. (வேதாந்த தேசிகர் அதிகார சங்க்ரஹம் (30-31).) யாத்ருச்சிக சூக்ருதமடியாக, அத்வேஷம் பிறந்து, அதனடியாக ஆபிமுக்யம் பிறந்து, உபாயமும் உபேயமும் அவனே என்றறிவதும் அவனருளாலே.

53. கிருஷ்ணனுடைய திரு நாமத்தை பாடுதல் எப்பொழுதும் வெற்றி தரும். "விஜயதே ஸ்ரீ கிருஷ்ண சங்கீர்த்தனம்" அவை நமது மனங்களாகிற கண்ணாடிகளை அழுக்கில்லாமல் சுத்தமாக வைக்கும். ஸ்ரீ கிருஷ்ணனின் திரு நாமங்களை ஜபிக்க கால நியமனம் இல்லை. எவன் ஒருவன் தன்னை துரும்பைவிட கேவலமாக நினைக்கின்றானோ, ஒரு மரத்தைவிட பொறுமையாக உள்ளானோ, பிறரை தன்னை விட உயர்ந்தவர்களாக எண்ணுகிறானோ, அவனால் பகவானின் திரு



நாமங்களை ஸ்மரிக்க இயலும். உனது திரு நாமத்தைக் கேட்டவுடன் எனது கண்கள் எப்போது கண்ணீரால் நிரம்பப்பெறும்? எப்போது பேச முடியாமல் போவேன்? எப்போது உடல் கட்டையாகி, மயிர்கூச்சங்கள் ஏற்படும்? என்கிறார் ஸ்ரீ சைதன்ய மஹாப்ரபு, தமது சிஷாஷ்டகத்தில். பகவானை அடைய, ஞானத்தைவிட அனுபவிக்கும் பக்தியே சிறந்தது என்கிறார்.



**54.** எவருடைய வாயினிலே நாராயணா என்கிற மங்களமான நாமமானது இருக்கிறதோ, எவர் நாராயணா என்கிற நாமத்தை திரும்பத் திரும்ப சொல்கிறாறோ, அவரை நாடி, கன்று எப்படி பசுவை நோக்கி ஓடுகிறதோ, அந்த மாதிரி எம்பெருமான் இவர்களைப் பின் தொடர்ந்து இவர்கள் அருகிலேயே எப்பொதும் ரஷித்துக் கொண்டிருப்பான், ஓடோடி வருவான். அதுபோலவே, ஹரி என்ற எழுத்துக்கள் யாரால் ஒருமுறை உச்சரிக்கப்பட்டனவோ, அவனால் மோஷத்துக்கு

போவதற்கு வேண்டிய சாதனங்கள் சித்தம் செய்யப் பட்டதாக ஆயின. {ஸ்ரீ விஷ்ணு தர்மம் 70-84}

55. ப்ரபன்னன் ப்ரம்ம நாடியின் மூலம் சரீரத்தை விட்டுப் போகும் போது, நல்ல இடமே, நல்ல பகலே, நல்ல சகுணமே வேண்டும் என்பதில்லை. இதனால் ப்ரபன்ன ஜீவன் விஷயத்தில் கால தேச காரணங்களைக் கொண்டு ஏதும் சொல்வதற்கில்லை என்று வேதாந்த தேசிகர் அதிகார சங்க்ரஹத்தில் (27) கூறுகிறார்.

56. பழத்துடன் கூடிய மரம் சேரியில் இருந்தாலும் பஷிகளால் ஆதரிக்கப் படுகிறது. பழம் தராத மரம் அக்ரஹாரத்தில் இருந்தால் கூட பஷிகளால் ஆதரிக்கப்படுவதில்லை. சர்வ லோகங்களுக்கும் சாஷியான கிருஷ்ணனுக்கு சாதி பேதமில்லை. தங்களை அறிவாளியாக நினத்திருக்கும் மனிதர்கள் வீணாக மயங்குகின்றனர்.

57. சர்வலோக நாயகனான ஸ்ரீ ராமபிரானை ஆசைப்பட்ட போதிலும், பிராட்டியைப் பகைத்து, அங்கம் அறுபட்டாள் சூர்ப்பனகை. ஆகையாலே, பகவத் விஷயத்தில் ஆசை உண்டானாலும், அவனடியார் திறத்து அபசாரமுண்டானால் சூர்ப்பனகைக்கு பலித்த பலமே பலிக்கும். எம்பெருமான் பகவத் அபசாரத்தைப்

பொறுத்துக்கொள்வான். ஆனால் தன் அடியாரிடத்து செய்த அபசாரத்தை பொறுக்கமாட்டான்.



58. இறைவனிடத்தில் அன்பு செய்வது நம் கடமை. பச்சிலை வைத்துக் கட்டிய சிலந்தி கட்டியில் முளை தானே கழலுதல் போலே, வினைகள் அவ்விடத்து நிற்க இயலாமல் தாமே ஒழியும். வினைகளை அழித்து ஒழித்தல் இறைவனது கடமை. ஆனால், இதனை முக்ய பயனாகக் கருதுதல் கூடாது என்பது ஞானச் செல்வர்கள் கண்ட முடிவு.

59. ஞான தசை, ப்ரேம தசை என்று இரண்டு உண்டு. எம்பெருமான் சர்வக்ஜன், சர்வசக்தன், சத்யபராக்ரமன், ஒப்பாரும் மிக்காரும் இல்லா மாமாயன் என்று தெளிந்து உணர்வது ஞான தசை.

ப்ரேம தசை என்பது, எம்பெருமான் மீது ப்ரேமை கொண்டு அவனுக்கு எதிரிகளால் ஏதாவது ஆபத்து வந்துவிடுமோ என்று பயந்து அவனது பாதுகாப்புக்காக மங்களாசாசனம் செய்வது. பெரியாழ்வார் பல்லாண்டு பாடியது போல. பரமபதத்தில் நித்யசூரிகளும், நித்யமுக்தர்களும் சாமவேத கானம் செய்யும் சப்தத்தைக் கேட்டு, எம்பெருமானுக்கு ஏதோ ஆபத்து வந்துவிட்டதோ என்று ஆதிசேஷன் விஷ மூச்சுக்காற்றை விட்டதுபோல. இதற்கு 'அஸ்த்தான பய சங்கை' என்று கூறுவர் பெரியோர். அதாவது பயமே ஏற்படவேண்டாத இடத்தில், பயம் வருவது.



60. கலங்காப் பெரு நகர் எனப்படும் பரமபதமான தேசத்திற்கு போக, உறுதியான சரீரமாகிய ரதம் வேண்டும். நல்ல குதிரையான மனம் வேண்டும்.

நல்ல புத்தியாகிய சேணம் வேண்டும். மார்க்கமான இந்த்ரியங்கள் நன்றாயிருக்க வேண்டும். மனமாகிய குதிரை சரியான வழியில் போகாவிடில், புத்தியாகிய கடிவாளத்தைக் கொண்டு அதை நல்வழியில் திருப்ப வேண்டும். இப்படி இருந்தால்தான் நாம் பரமபதம் போய் சேரலாம். இல்லாவிடில், அவை நம்மை சம்சாரமான படுகுழியில் தள்ளி விடும்"— கடோபனிஷத்.

61. உலகிலுள்ள மனிதர்களுக்கு சீக்கிரம் பலன் கொடுக்கக்கூடிய செயல்களிலேயே அதிக விருப்பம் உண்டாகிறது. ஆதலால் உலகத்திலுள்ளவர்கள் எம்பெருமானைத்தவிர மற்ற தேவதைகளையே வணங்கி, செல்வம் மற்றும் புத்ராதிகளைப் பெறுகிறார்கள். ஆனால் அந்தப் பலன்கள் அல்பமாயும், ஸ்திரம் இல்லாமலும் இருக்கும். அழியக்கூடியது. மாறக்கூடியது. எவரும் எம்பெருமானது மேன்மையை அறிந்து அழியாத செல்வமான மோக்ஷத்தை விரும்பி அவனை ஆராதிப்பதில்லை. அவரவர்களது பூர்வ ஜன்ம வாசனையே இப்படி அவர்களை பிற தேவதைகள வழிபடச்செய்கிறது.

62. ரத்ன அபஹாரம் பண்ண அஞ்சாதவன், விறகையும், வைக்கோலையும் களவு செய்ய அஞ்சுவானோ? என்கிறார் நம்பிள்ளை. அதாவது,

எம்பெருமானுக்கே சொந்தம் எனப்பட்ட ஆத்ம வஸ்துவை களவாடியவன் சாதாரண வஸ்துவை அபஹரிக்க தயங்க மாட்டான். அதாவது பிறர் பொருளை நாடுவதும், பிறன் மனையை நாடுவதும் அவனுக்கு எளியது அன்றோ? என்கிறார்

63. தான் விரும்பும் பலனை வேறு எந்த வழியிலும் அடைய முடியாமலிருக்கும்போது, மஹா விஸ்வாசத்துடன் ஸமர்த்தனான ஒருவனிடம் நீயே இப்பொருளை அடைவிக்க உபாயமாக இருக்க வேண்டும் என்று ப்ரார்த்திப்பது சரணாகதியாகும் (பரதமுனி). பஞ்சாங்கத்தில் மழை வரும் என்று போட்டிருந்தாலும், அந்த பஞ்சாங்கத்தை பிழிந்தால் ஒரு சொட்டு தண்ணீர் வராது. அதுபோல, எவ்வளவுதான் எம்பெருமானைப் பற்றி படித்து இருந்தாலும் உண்மையான சரணாகதி செய்யாவிடில் யானை செய்த ஸ்னானம் போல் வீணே.

64. எப்படி நமது சரீரம் நம் விருப்பத்திற்கற்ப பயன்பட்டு தனக்கு ஒரு பயன் கருதாது, நமக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறதோ, அதுபோல நம்மைத் தனக்கு சரீரமாகக் கொண்டுள்ள எம்பெருமானுக்கு சரீரமான நாமும் அவன் விருப்பப்படி பயன்பட்டு, நமக்கு ஒரு பயன் கருதாது, அந்த எம்பெருமானுக்கு மகிழ்ச்சியை கொடுத்தல் வேண்டும் என்பதே

அனன்யார்ஹறசேஷத்வ ஞானம். நாம் சரீரம். எம்பெருமான் சரீரி.

65. ஸ்ரீ க்ருஷ்ணனே பெரியவாச்சான் பிள்ளையாக



அவதரித்தான் என்று கூறுவர். ஆச்சான் பிள்ளை கோஷ்டியிலே, சில ஸ்ரீவைஷ்ணவர்கள் எங்களுக்கு தஞ்சமாயிருப்பதற்க்கு ஒருவார்த்தை அருளிச்செய்ய வேண்டுமென, அவரும், கலங்குகிறவனும், கலக்குகிறதும், கலங்கிக் கிடந்தவர்களுக்குத் தெளிவிக்கிறவனும், தெளிகிறவனும், தெளிந்திருக்கிறவனுமானவனையே இருப்பது என்று அருளிச்செய்தார். இதில் கலங்குகிறது ஜீவாத்மா. கலக்குகிறது அசித்து, கலங்கிக் கிடக்கிறார்கள் சம்சாரிகள். தெளிவிக்கிறவன் ஆசார்யன், தெளிகிறான் சேதனன், தெளிந்திருக்கிறான் ஈஸ்வரன். ஆகையால், தெளிவிக்கின்ற ஆசார்யனையும் தெளிந்திருக்கும் ஈஸ்வரனையும் பற்றுகைகாண் இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபமென்று அருளிச்செய்தார்.

66. எம்பெருமானிடம் இல்லாத ஆனால், ஜீவன்களிடமுள்ள ஆறு தோஷங்கள்:

- குறைதல்
- அழிதல்
- மாறுதல்
- வ்ளர்ச்சி
- பிறப்பு
- இறப்பு.

67. கங்கா, கீதா, கோவிந்தா, காயத்ரி - இந்த நாங்கு 'க' காரங்களும் யாருக்கு ஞாபகம் உள்ளதோ, அவர்களுக்கு மறுபிறவி என்பதே இல்லை. இதைத்தான் ஆதி சங்கரர் தமது 'பஜகோவிந்த்தத்தில்'கூறியுள்ளார்" சதுர் ககார சம்யுக்தே, புனர் ஜன்ம நவித்யதே". அதேபோல, அகல்யா, த்ரெளபதி, சீதா, தாரா மண்டோதரி ஆகிய ஐந்து பேரை நினத்தாலே பாபங்கள் அனைத்தும் போகும்.

68. எம்பெருமானுடைய க்ருபயையும், கர்மங்களைப்போலவே நாம் அனுபவித்தே தீர வேண்டும், (ஸ்ரீ வசன பூஷணம்) எம்பெருமானுடைய



நிர்ஹேதுக க்ருபை என்பது எம்பெருமான் நம்மீது வைத்துள்ள காரணமில்லா கருணை (Causeless compassion). சஹேஹேதுக க்ருபை என்பது எம்பெருமானிடம் நாம் கேட்டு பெறவேண்டிய மோக்ஷ விஷயமாகும்.

69. "கரணத்ரய சாரூப்யம் இதி சௌக்ய ரசாயணம்". இதன் அர்த்தம் மனம், வாக்கு, காரியம் இவை மூன்றும் ஒன்றாக, ஒரே நிலையில் இருக்கவேண்டும். ஞானிகளுக்கு, இவை மூன்றும் ஒரே மாதிரி இருக்கும்.

70. பட்டாபிஷேகதிற்கு முதல் நாள் விபவ அவதாரமாகிய ஸ்ரீராமனுக்கும் அர்ச்சாவதார மூர்த்தியாகிய ஸ்ரீ ரங்கநாதருக்கும் இடையே நிகழ்ந்த சம்பாஷனையாக பூர்வர் கூறுவர்.

ராமன்: நாளை விடியலில் வசிஷ்டர் என் தலையில் முடியை கவிழ்த்து விடுவர், நான் எங்ஙனம் ராவண வேட்டை ஆடுவது.

ரங்கநாதர்: அதற்கு நான் என் செய்வது

ராமர்: உம்மால் ஆகாததுண்டோ

ரங்கநாதர்: முடிசூட மறுத்துவிடும்.

ராமர்: பித்ரு வாக்ய பரிபால அவதாரத்தில் இது எங்கணம் செய்வது. நீர்தான் நெஞ்சு தோறும் எண்ணங்களை தோற்பிக்க வல்லவர். யார் மனதிலாவது புகுந்து விக்னம் விளைவிக்க வேண்டும்

ரங்கநாதர்; சரி போம்.



அதன்பிறகு எங்கோ கிடந்த மந்தரையை தூண்டி கைகேகி மனதை மாற்றினார். ராம பட்டாபீஷேகதுக்கு எல்லா ஏற்பாடுகளும் முடிந்தது என்று ஓய்ந்து இருந்த தசரதனின் மனதில் புகுந்துகொண்டு பின்னிரவில் கைகேயி க்ரஹத்திற்கு போகலாமே என்று எண்ணத்தை தோற்று வித்தார். ஆக ராமனது வேண்டுகோளுக்கு இண்ங்கி, ஸ்ரீ ரங்கனாதர் மூவர் மனதிலே புகுந்து ராமன் கானகம் செல்ல உதவினார் என்பது நம் பூர்வர் முடிவு.



71. வைகுந்த ஏகாதசி அன்று கோவிலில்,பரமபதவாசலை மிதிப்பது வெறும் சம்ப்ரதாயம் மட்டுமில்லாமல், மீண்டும் இவ்வுலகில் பிறக்காமல், ஸ்ரீ வைகுந்தமாகிய பரமபதத்தில் சேர்வதர்க்கு சரணாகதி ஒன்றே சரியான வழி என்பதை உண்ர்ந்து, அர்ச்சிராதி மார்கத்தில் சென்று எம்பெருமானுடைய "நித்ய விபூதி" என்னும் கலங்காப் பெரு நகரை அடைந்து, ஸ்ரீதேவி, பூதேவி,நீளாதேவி சமேதரான, ஸ்ரீயப்பதியான ஸ்ரீமன் நாரயணனுக்கு, சகலவிதமான கைங்கர்யங்களை, "செய்து கொண்டிருக்க கைங்கர்யப் ப்ராப்தியை ப்ரார்த்திக்க வேண்டும். சூழ்விசும்பு பனிமுகில் என்று தொடங்கும் பத்து பாசுரங்களில் "வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே" என்று நம்மாழ்வார் இதைத்தான் கூறுகிறார்.

72. இரு நூறு வருஷங்கள் வாழ்ந்திருந்து, சேதனர்களை திருத்துங்கோள் என்று கூறி ஆதிசேஷனை இவ்வுலகிற்கு ராமானுஜராக அனுப்பிவைத்தார் எம்பெருமான். பகவத் ராமானுஜர் நூற்றியிருபது ஆயுட்காலங்களே இருந்து, எம்பெருமானை விட்டு தரிக்க இயலாது என்று

ஆர்த்த ப்ரபத்தி செய்து எம்பெருமானின் திருவடிகளை அடைந்தார். மீண்டும் ஆதிசேஷனை மணவாள மாமுனிகளாக இவ்வுலகுக்கு அனுப்பிவைத்தார் எம்பெருமான்.






மாமுனிகளும் 73 ஆண்டுகள் இந்த நிலவுலகில் எழுந்தருளியிருந்து தம்முடைய அவதார காலம் தலைக்கட்டியருளி எம்பெருமான் திருவடி அடைந்தார். நமக்கவாரை நாமே தேடிக்கொள்வோம் என்று நம்பெருமாள், உடையவரை ஸ்வீகரித்ததுபோல, மணவாள மாமுனிகளையும், தன் பக்கலில் ஆஸ்ரயித்துக்கொண்டார் என்பர்.

**73,** கண்ணினுன் சிறுத்தாம்பினால் கட்டுண்டுப் பண்ணிய பெருமாயனாகிய கண்ணன், தான் உரலால் கட்டுண்டு கிடக்கும்போது, வெண்ணையும், பெண்களும் கோலாகலமாக இருக்கும்போது, நாம்

இப்படி கட்டுண்டு உள்ளோமே என்று வயிறெரிந்தான். இது எப்படி ஊள்ளதென்றால், திருவரங்கம் பெரிய கோவிலில் திருவத்யனோத்ஸ்வம் நடக்கும்போது, ராஜாவின் கட்டளையால்



சிறையிலிருப்பவர்கள், "திரு நாளை இழந்தோமே என்று வருந்துவது போல் உள்ளது. என்பர் பூர்வர்.

74. கூரத்தாழ்வான் உடல் நிலை சரியில்லாத போது அவர் காதில், பகவத் ராமனுஜர் த்வய மந்திரத்தை ஓதினார். இதற்கு இப்போது என்ன அவசியம் என்று மற்றவர் வினவ, ராஜகுமாரனுக்கு நாக்கில் பச்சைக் கற்பூரம் இல்லாவிடில், நாக்கு வரளுமாப்போலே, த்வயம் இல்லாவிடில் `ஆழ்வானுக்கு நாக்கு வரண்டு போகும் என்று ராமானுஜர் அருளினார்.

75. ஸ்ரீமத் பகவத்கீதையில் 9ம் அத்யாயத்தில் 22ம் ஸ்லோகத்தில் 'யோக ஷேமம்' என்கிற பதம் வருகிறது. இதன் அர்த்தம், எவர் ஒருவர் மற்ற சிந்தனைகள் ஏதுமின்றி, எந்தப் பலனையும் எதிர்பாராமல் என்னையே உபாசிக்கிறார்களோ, அவர்களைத் தன்னிடம் சேர்த்துக்கொள்ளும்

பொறுப்பை பகவான் ஏற்றுக்கொள்கிறார். இவ்வாறு சேர்த்துக் கொள்வது 'யோகம்' என்றும் ஷேமம் என்பது அந்த யோகத்தைப் பாதுகாப்பதான ஷேமத்தையும் அவர் மேற்கொள்கிறார்.



அதாவது, அவர்களை மீண்டும் ஸம்சார உலகத்திற்கு அனுப்புவதில்லை. பகவானையே தைல தாரையாக உபாசிப்பவர்கள் மஹாத்மாக்கள், ஞானிகள். அவர்களுக்கு அந்தமில் பேரின்பத்தை பகவான் அளிக்கிறார். ஏறவிட்டு ஏணி பிடுங்கும் பரமனன்றோ பகவான்.

**76.** உண்மையான வைஷ்ணவன் எப்படி இருக்கவேண்டும் என்று ஜெய்முனி முனிவர் வ்யாசரிடம் கேட்க, அதற்கு வ்யாசர், கலியுகத்தில் மோக்ஷம் அடைவதற்கு சாஸ்திரங்களைக் கேட்பதும், சாதுக்களின் சகவாசமும், அதனால் உண்டாகும் பக்தியாலும், ஞானத்தாலும் நற்கதி உண்டாகிறது. எவ்விடங்களில் ஸ்ரீக்ருஷ்ணனுடைய கதை பேசப்படுகிறதோ, அவ்விடங்களில் பகவான்

நிரந்தரமாக வாசம் செய்கிறார். பகவான் க்ருஷ்ணனுடைய கதையைக் கேட்க மனதில் விருப்பம் ஏற்பட்டதும், அவனது ஜென்ம ஜென்மாந்திர பாபங்கள் நசித்துப் போகின்றன.



ஸ்ரீக்ருஷ்ணனுடைய சரித்திரம் கூறும் புத்தகம் யார் வீட்டில் இருக்கிறதோ, அந்த வீட்டுப் பக்கம் துன்பங்கள் அணுகுவதில்லை. யமபயம் நீங்கும். குலத்துக்கு ஒருவன் வைஷ்ணவனாக இருந்தால் போதும். அந்தக் குலமே முழுவதுமாக பாவங்களிருந்து விடுபட்டு மோஷத்தை அடையும். காமம், க்ரோதம், லோபம், மோகம் முதலிய தீய குணங்களை விட்டு, ஆணவத்தை அடக்கி, உத்தம வாழ்க்கையை வாழ்கிறானோ அவனே உண்மையான வைஷ்ணவன். யாரொருவன் தவறாமல் ஏகாதசி வ்ரதத்தை அனுசரிக்கிறானோ, யாரொருவன் என்னேரமும் பகவான் ஹரி நாமத்தை உச்சரிக்கிறானோ, துளசி தளத்தை அணிந்துகொண்டுள்ளானோ, யாருடைய வீட்டில் சாளக்ராமம் பூஜிக்கப்படுகிறதோ, யாரொருவன் பகவானுக்கு சமர்ப்பித்த ப்ரசாதத்தை அமிர்தமாகக்

கருதி உண்கிறானோ, அவனே உண்மையான ஸ்ரீ வைஷ்ணவன்.

77. நமது அந்திம காலத்தில், சரீரம் கீழே விழுந்து, ஆத்மா உத்தமமான வழியான மோஷ வழியில் செல்வதற்கு 'அர்ச்சிராதி மார்க்கம் என்று பெயர். அந்த மார்க்கத்தில் சென்றால், வைகுண்டத்தில் நம்மை சேர்த்து விடும். 'அர்ச்சி' என்றால் அக்னி. அக்னியை முதலாக உடைய மார்க்கம். அதன் பின் வரிசையாக சுக்ல பஷ அபிமானதேவதை, உத்தராயண அபிமான தேவதை, பகலுக்கு அபிமான தேவதை எல்லாம் வரவேற்கிறார்கள். விரஜா என்ற உத்தமமான நதியில் ஸ்னானம் பண்ணுகிறது. இந்த தேகம் போய், எம்பெருமானுக்கு ஒத்த 'அப்ராக்ருதமான' திருமேனி கிடைக்கும். இதற்கு சாரூப்யம் என்று பெயர். அதன் பிறகு அமானவன் என்று ஒருவன் வந்து கையைப் பிடித்து அழைத்துச் செல்வான். அவனுக்கு வித்யுத் புருஷன், மின்னல் புருஷன் என்று பெயர். அவன் கையாலே தீண்டுவதற்கு கடன்பட்டிருக்கவேண்டும் ".அமானவனும் நம்மைக் கரத்தாலே தீண்டல் கடன்' என்கிறார் மணவாள மாமுனிகள்.

திவ்ய மாமணி மண்டபத்திலே பரமாத்மா, ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி சமேதனாய் வீற்றிருக்கிறான். இந்த ஜீவனை வாத்சல்யத்துடன் அழைத்து, தன் மடிமேல் அமர்த்துகிறான். நம் சிரசில் அவன்

திருவடியை வைக்கிறான். இதையே "திருப்பொலிந்த சேவடி என் சென்னிமேல் பொறித்தாய்' என்கிறார் ஆழ்வார்.

**78.** ஸ்ரீ வைஷ்ணவ பரிபாஷை என்பது காலங்காலமாக நமது சம்ப்ரதாயத்தில் ஊறி வந்தது, காலப்போக்கில் அவை மாறிவிட்டாலும், நமது வைஷ்ணவ பெரியோர்கள், இன்றும் அதை அனுஷ்டித்து வருகிறார்கள். அவற்றில் சிலவற்றைப் பார்ப்போம்.

நமது சம்ப்ரதாயத்தில் 'நான் என்று சொல்வது அஹங்காரத்தைக் குறிப்பதாகக் கொள்ளப்பட்டு, அதற்கு பதிலாக, 'அடியேன்' என்று கூறுவர்.

பெரியவர்களை உடம்பு சுகமா? என்று விசாரிக்கும்போது, ஸ்வாமி, திருமேனி பாங்கா? என்று வினவ வேண்டும். பெரியோர்கள் பெருமாள் சேவிப்பதை, மங்களாசாசனம் என்பர்.

**மற்றும் உபயோகத்திலுள்ள பரிபாஷைகள்.**

| | |
|---|---|
| வணங்குதல் | : தெண்டன் சமர்ப்பித்தல் |
| பிறர் நமக்கு எழுதும் கடிதம் | : ஸ்ரீமுகம் |
| நமது வீடு | : அடியேன் குடிசை |
| பிறர் வீடு | : ஸ்வாமி திருமாளிகை |
| ஆமாம் என்று சொல்லாமல் | : அடியேன் என்று சொல்லவேண்டும் |

| | |
|---|---|
| கோவிலுக்கு செல்வது | : சன்னிதிக்கு செல்வது. |
| ஸ்வாமி கும்பிடுவது | : பெருமாளை சேவிப்பது |
| பெருமாள் வீதி உலா | : பெருமாள் புறப்பாடு |
| என்ன நினைக்கிறீர் | : ஸ்வாமி திருவுள்ளம் என்ன |
| என்ன வேண்டும் | : தேவரீன் நியமனம் என்ன |
| சாதம் | : ப்ரசாதம் |
| குழம்பு | : நெகிழமுது |
| ரசம் | : சாற்றமுது |
| காய்கறி | : கறியமுது |
| பாயசம் | : திருக்கன்னமுது |
| தண்ணீர் | : தீர்த்தம் |
| சமையல் | : தளிகை |
| ஸ்னானம் | : தீர்த்தமாடுதல் |
| வீடு | : அகம் |
| வீட்டுப் பெருமாள் சன்னிதி | : கோவிலாழ்வார் |
| சன்னிதி திறத்தல் | : திருக்காப்பு நீக்குதல் |
| நிவேதனம் | : தளிகை அமுது செய்தல் |
| துளசி | : திருத்துழாய் |
| அபிஷேகம் | : திருமஞ்சனம் |
| திருக்குளம் | : புஷ்கரணி |
| பெருமாள், தாயார் பாதுகை | : ஸ்ரீ சடாரி,சடகோபம் |
| நம்மாழ்வார் பாதுகை | : ஸ்ரீ இராமானுஜம் |
| இராமானுஜர் பாதுகை | : முதலியாண்டான் |

மணவாள மாமுனிகள் பாதுகை: பொன்னடியாம் செங்ககமலம்
உணவு உண்ண : அமுது செய்ய

திரு என்ற சொல் அதிகமாகப் பயன்படுத்துதல் அவசியம். திருமால், திருமகள், திருமேனி, திருமடைப்பள்ளி, திருத் தகப்பனார், திருத் தாயார், திருத் தமையனார், திரு தமக்கையார் போன்றவை.. எழுத ஆரம்பிக்கும் போது 'ஸ்ரீமதே இராமானுஜாய நம; என்றும் முடிக்கும் போது அடியேன் இராமானுஜதாசன் என்றும் முடிக்கவேண்டும்.

79. காஞ்சி தேவப்பெருமாள் திருக்கச்சி நம்பிகள் மூலமாக இராமானுஜருக்கு பின்வரும் ஆறு உபதேசங்களை அருளிச்செய்ததாக சொல்லப்படுகிறது.



திருக்கச்சி நம்பிகள்
மாசி – ம்ருகசீர்ஷம்



1. திருமாலே முழு முதற்கடவுள். (அஹமே பரம் தத்வம்)

2. ஜீவாத்மாவினின்றும் பரமாத்மா வேறுபட்டவன் (தர்சனம் பேதயே வச)

3. ஆண்டவனை அடையும் முக்தி நெறி சரணாகதியாகும். (உபாயே ஹீ ப்ரபத்திஸ்யாத்)

4. மரண காலத்தில் பெருமானை நினைக்காவிடினும், பாகவதர்களுக்கு முக்தி கிட்டும் (அந்திம ஸ்மிருதி வர்ஜனம்)

5. சரீரம் முடிந்ததும் பாகவதர்களுக்கு முக்தி (சரீர அவசாதே முக்தி)

6.பெரிய நம்பியை ஆசார்யனாக நினைத்து நடப்பாயாக. (மஹா பூர்ண ஸ்மாஸ்ரயனம்)

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:



தாமான திருமேனி (ஸ்ரீரங்கம்)



தாமுகந்த திருமேனி (ஸ்ரீபெரும்புதூர்)



தமருகந்த திருமேனி (திருநாராயணபுரம்)

80. ஸ்ரீ இராமானுஜர். தமது அந்திம காலத்தில், திருமால் அடியார்கள் வீடு பேற்றினை அடைவதற்கு பின்வரும் ஆறு கட்டளைகளை பிறப்பித்ததாக ஆறாயிரப்படி குரு ப்ரம்பரை ப்ரபாவத்தில் சொல்லப்பட்டுள்ளது.

1 ஸ்ரீ பாஷ்யத்தை பயின்று அதைப் பிறர்க்கும் கற்பியுங்கள். இது பரமனுக்கு உகந்த தொண்டு. இது முடியவில்லை என்றால்,

2 த்வ்ய ப்ரபந்தங்களை நன்கு கற்று அவற்றை உரிய சீடர்களுக்கு கற்பியுங்கள். இது முடியவில்லை என்றால்.

3. ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட த்வ்ய தேசங்களில் உறையும் எம்பெருமானுக்கு அமுதுபடி, சாத்துபடி, போன்றவற்றை செய்யுங்கள். இது முடியவில்லை என்றால்

4. திரு நாராயணபுரத்தில் ஒரு குடிசையாகிலும் கட்டிக்கொண்டு அங்கே அமைதியுடன் வாழுங்கள். திரு நாராயாணபுரம் என்று ஸ்ரீ இராமானுஜர் குறிப்பிட்டது, அனைத்து திவ்யதேசங்களுக்கும் பொருந்தும் என்பர் பெரியோர். இதுவும் முடியாதென்றால்,

5. த்வய மந்திரத்தை ஜபித்துக் கொண்டிருங்கள். இதுவும் முடியாதென்றால்,

6. ஞானமும் பக்தியும் ஒருங்கே நிறைந்து பற்றற்றவர்களாக விளங்கும் ஒரு ஸ்ரீவைஷ்ணவனைத்தேடி, அவனுக்கு தொண்டு செய்து, அவனே உங்களுக்கு மனமுவந்து அருள் செய்யும்படி நடந்து கொள்ளுங்கள். இதன் மூலம் அஹங்காரம் தொலையும். அதுவே முக்திக்கு வழி வகுக்கும்.

மேலே சொல்லப்பட்ட ஆறு கட்டளைகளில் ஏதேனும் ஒன்றையாவது பின்பற்றி நாமும் முக்தியடையப் பாடுபடுவோம். இது நம்மைக் கடைத்தேற்றுவது மட்டுமன்றி, நம்மைச் சார்ந்தவர்களையும், நமது சந்ததிகளையும் நிச்சயம் கடைத்தேற்றும் என நம்புவோம்.

அடியேன் இராமானுஜதாசன்



ஸ்ரீ வைகுந்தநாதன் பெருமாள்

திரு பரமேஸ்வர விண்ணகரம், காஞ்சிபுரம்





ஸ்ரீ வேதாந்த தேசிகர்



ஸ்ரீ இராமானுஜர்



ஸ்ரீ மணவாள மாமுனிகள்

பகவத் ஸ்ரீ இராமானுஜர் என்னும் உறுதியான சேதுபந்தனம் இருக்கும் வரையில் நமக்குள் வேற்றுமை என்பதே இல்லை.